தெரியுமா?'' என்றான். உடனே குழந்தைகள் துள்ளிக் குதித்து ஓடிவிட்டார்கள்.

மூர்த்தி, துணிகளை வெட்ட உட்கார்ந்தான். "வேணி! விளக்கு நிறைய எண்ணெயைப் போட்டு ஏத்தி வை. நீயும் கொஞ்சம் சகாயம் செய்யணும்'' என்றான். அப்போது அவன் தொனியில் ஒரு புதிய ஜீவன் த்வனித்தது. வேணியும் சந்தோஷத்துடன், "இதுக்குச் சொல்லணுமா! நான் காத்துண்டிருக்கேன்'' என்றாள். புருஷனும் மனைவியும் ஒற்றுமையாக வேலை செய்ய வாரம்பித்தார்கள். மூர்த்தி மெஷினில் தைக்க, வேணி துணிகளை அளவுப் பிரகாரம் கத்தரித்து, ஒரு ஓட்டு ஓட்டி வைத்து உதவி புரியவாரம்பித்தாள்.

## 6

மூர்த்தியின் தாயாருக்கு ஒருவிதமான வாதத்தின் கொடுமையால் நடக்க முடியாது நகர்ந்துகொண்டே செல்லும் கதி ஏற்பட்டுவிட்டதால், பட்டின வாஸத்தில் இச் சிறிய விடுதிக்குள் தானும் கூடவிருந்து மகன் படும் கஷ்டத்துடன் இன்னும் கஷ்டம் கொடுக்கப் பிரியப்படாமல் கிழவி கிராமத்தில் இருக்கும் தனது சகோதரியின் வீட்டில் தான் இருப்பதாகவும், மாதா மாதம் ஏதேனும் கொடுத்தனுப்பியும், அடிக்கடி வந்து பார்த்துக்கொண்டும் இருந்தால் போதுமென்றும் கூறிச் சென்றுவிட்டாள்.

மூர்த்தி, தங்களுக்குச் சாப்பாட்டுக்கு இல்லையெனினும் மாதம் எப்படியாவது கஷ்டப்பட்டுத் தன் தாயாருக்கு 5 ரூபாய் சேமித்தும், கடன்பட்டும் அனுப்பி வந்தான். இரண்டு மாதத்திற்கொருமுறை தாயாரைப் பார்த்துவிட்டு வருவான். இப்போது அடியோடு வருவாய் குறைந்துவிட்டதன் பயனாக ஆறுமாத காலமாய் ரயில் செலவுக்குப் பணம் அகப்படாமல் தாயாரைப் போய்ப் பார்க்கவே முடியாது தவிக்கிறான். தான் ரயிலுக்குச் செலவு செய்வதை அவர்களுக்கு அனுப்பி வைத்தால் உபயோகமாயிருக்கும் என்ற எண்ணத்துடன் நாட்கள் கடந்துவிட்டன.

இன்று இந்த வேலை வந்தவுடனே மூர்த்தியின் மனத்தில் குழந்தைகளின் ஆவலைப் பூர்த்தி செய்வதற்கு உண்டான சந்தோஷத்தைவிடத் தன் தாயாரை எப்படியாவது போய்ப் பார்த்துவிட்டு வரவேண்டுமென்ற பேராவலும், தாயின் பிம்பம்

கண்முன்பு தெரிவதுபோன்ற தோற்றமும் உண்டாயின. வேணி குழந்தைகளுக்குச் சாப்பாடு போட்டுப் படுக்க வைத்தாள். புருஷனுக்கு எழுந்து வந்து இலையில் உட்கார்ந்து சாப்பிடும் நேரமும் வீணுகாமல், வேணியே கலந்து அவன் கைத் துக்கொண்டிருக்கும்போது வாயில் போட்டவாறு, "என்ன! நாளைக்குக் கார்த்திகையானதும் மறுநாள் முதலில் அம்மாவைப் பார்த்து விட்டு வரணும். நானும் பார்த்து ரொம்ப நாளாய்விட்டது எனக்கும் பார்க்கவேண்டும் போலிருக்கு" என்ருள்.

ஒரே சமயத்தில் மூர்த்தியின் கால்கள், கைகள், கண்கள், மூளை முதலிய எல்லாம தையல் வேலையில் உழைக்கின்றன. வாயில் போட்ட சாதத்தை வாய் தன் வேலையைச் செய்து கொண்டிருக்கிறது! மனத்திலோ கிராமத்திலிருக்கும் தன் ஆருயிர் அன்னையின்மீது மோதும் அன்பு அலைகள் அடிக்கின்றன. தான் நினைக்கும் நினைப்பையே தன் மனைவியும் கேட்டதால், மிகுந்த மகிழ்ச்சியுடன், "வேணீ! நானும் அதையேதான் யோசித்துக்கொண்டிருக்கிறேன். அதே நினைவாயிருக்கிறது. அதோடு சென்ற சில மாதமாய் 5 ரூபாய் அகப்படாததால், 3 ரூபாய்தான் அனுப்பினேன். அது அவர்களுக்குப் போதல்லையாம் அதனுல் ஒருமாதிரியாய் கோபித்துக் கடிதம் எழுதியிருக்கிருர்கள். 'தள்ளாதகிழவியான அவளை ஏதாவது உபத்திரவம் செய்கிருர்களோ! அல்லது ஆகாரம் குடுக்காமல் பட்டினிபோடுகிருர்களோ?...என்றெல்லாம் என் மனம் அலைகிறது. ஆகையால், நாளை மறுநாள் போய்வருவோம்" என்று சாந்தமாகக் கூறும்போது, தாயின் பாசத்தினுல் மூர்த்தியின் கண்களில் நீர் நிறைந்துவிட்டது. ஆகிலால நினைவு முற்றும் மூளையில் சுற்றவாரம்பித்தது.

வேணி தானும் சாப்பிட்டு வேலை செய்ய உட்கார்ந்தாள். பௌர்ணமிக்கு முதல் நாளாகையில் நிலவு உலகத்தையே பால்யமாக்கி விட்டது. இரவின் இயற்கைத் தேவி வெகு குதூகலமாக சிம்மாசனத்தில் வீற்றுச் செங்கோல் செலுத்துகிருள். இராக்காலப் பக்ஷி இனங்கள் தம்தம் உத்ஸாகப் படிக்குப்பாடிக்கொண்டிருக்கின்றன. சிறிது தூரத்திலிருக்கும் கடல், மதிமன்னனைக் கண்டு பொங்கிப் பூரித்துப் பேராரவாரம்செய்து இரைச்சலிடுகின்றது. அந்த இரைச்சலாகிய சங்கீதத்திற்கு ஜீவனுடன் கூடிய தம்பூரா ச்ருதி கூட்டுவது போன்று மூர்த்தியின் தையல் மெஷின் த்வனிக்கின்றது.

தெருக்கோடியிலுள்ள விநாயகர் கோவிலின் கடியாரமும், பெரிய மணியும் இராக்காலம் உருண்டு செல்லும் மார்க்கத்தை அவ்வப்போது அளந்து காட்டிக் கொண்டே செல்கின்றன. இரவு மணி ஒன்று ஆனதை அந்த மணி விளக்கியபோது தான் வாஸந்திகா தூக்கத்தில், "ராஜு! பட்டாசு பொட்ட ளம் பாத்தியா! மத்தாப்பூ பாத்தியா! நாம்ப ரெண்டுபேரும் சுடலாண்டா; சண்டெ போடாதேடா; சாமி நல்லவர்டா! நமக்குப் பட்டாசு குடுத்தார்" என்று வாய்ப் பிதற்றினாள்.

அந்தப் பிதற்றல் தம்பதிகளின் கை வேலையின் ஊக்கத்தை அதிகரிக்கச்செய்து, கையில் இன்னும் வேகத்தைக் கொடுக்கும் சக்தி வாய்ந்த சாட்டைபோலாயிற்று. வேணி தடுக்கமுடியாத தூக்கம் வந்து உபத்திரவிப்பதை அவ்வப்போது தடுத்துக்கொண்டே தன் வேலையைச் செய்துகொண்டிருந்தாள்.

அச்சமயம் அவ்வறைக்கு வெளியில் பைசாசம் கத்துவது போன்ற பிரும்மாண்டமான ஓர் சப்தம் மெஷினின் ஓசையையும் தாக்கிக்கொண்டு வந்து, இவர்கள் செவியில் கேட்டதும், இருவரும் நடுங்கியபடியே அதைக் கவனித்தார்கள். இவர்கள் காதில் விழுந்த சப்தம் வீட்டுக்காரக் கிழவியின் குரல்தான் என்று தெரிந்தது. "சனியன் பிடித்த எழவு! ராவெல்லாம் தூங்கவிடாமெ கர்ரா புர்ராவென்னு மெஷின் தலைவேதனை பண்ணிண்டிருந்தா எப்படி தூங்குவது? மூணு நாளா ஒடம்பு சரி இல்லாமெ கடக்கும் என் பேரன் இந்த எழவெடுத்த ஓசையாலே தூக்கமே வாராமே தவிக்கிறான். தூக்கம் வாராத்தாலே ஜுரம் அதிகமாறது! ஏ திருவேணீ! திருவேணீ! கதவெத் தாரடீ!" என்று கூறிக் கதவைப் பலமாக இடித்தாள்.

இதைக் கேட்ட வேணி அலறியடித்துக்கொண்டு எழுந்து போய், கதவைத் திறந்து பயத்தோடு நின்று, "என்ன பாட்டீ!" என்றாள். கிழவி பின்னும் தூபம் போட்ட பிசாசு போல் எழும்பிக் குதித்து, தன் பொக்கை வாயை ஆட்டி அறைத்துக் கையை நீட்டி மடக்கி, நர்த்தனம் செய்தவாறு, "ஏம், பாட்டியா? இப்பாழும் ஓசை எம் பேரனெ கொண்ணு விடும்போலிருக்கிறதே. அப்போ பிடிச்சு நானும் பாக்கறேன், நிக்கிற வழியே காணம். எனக்குப் பொறுக்கமுடியாமே வந்தேன். அடே மூர்த்தி! நிறுத்தப்போறயா இல்லையாடா!" என்று அலக்ஷியமாய்க் கேட்டாள்.

வேணி:—(மிகுந்த பய பக்தியுடன்) பாட்டீ! இத்தனை நாள் மெஷின் துருப்பிடித்துதானே கிடந்தது. ஏதோ பகவான் கிருபையால் வந்த வேலை இன்னிக்கு ஒருநாள் தானே பாட்டீ! நான் தான் கதவெ சாத்தி இருக்கேனே; அதுவா ஒங்களுக்கு மெத்தெ மேலே ஓசை கேக்கறது? பாட்டீ! தயவு பண்ணி மன்னிக்கணும்.

கிழவி:—என்னடி பெரிசா அளக்கரே? தினம் இந்த மாதிரி சுத்தி சுத்தி தலைவேதனெ பண்ணல்லியேன்னு கொறையா இருக்கோ! வீட்டுலெ சீக்குக்காரா இருக்கறது கூட தெரியாமெ என்ன அமக்களண்டீ! போது விடியறதுக்குள்ளே குபோனு பூடப்போறயோ! நோயாளி கஷ்டப் பட்றுன். இனுமே சுத்தா தேங்கோ!....

இதற்குள் பக்கத்து வீட்டுக்காரன் அங்கு ஓடி வந்து, "இதென்ன தலைவேதனை! ராத்திரி எல்லாம் ரோதனையா யிருந்தா எப்படி தூங்கறது? வீட்டிலே பிரஸவிச்சி இருக்கற வளுக்குத் தலைவேதனை பொறுக்கமுடியலேன்னு கத்தரா! தூக்கம் முழிச்சு தலைநோவு கண்டு ஜன்னி வந்துடுத்துன்னு என்ன பண்றது? வாசல்லேந்து ரெண்டு தரம் கூப்டேன். இந்த பாழாப்போன மெஷின் ஓசேலே எதுதான் காதுலே விழும்!" என்று அவன் சொல்லும்போது மூர்த்தியின் இதயத்தில் குத்துவதுபோலிருந்தது.

மூர்த்தி:—பெரியம்மா! ஐயா! நான் பரம ஏழேன்றது ஒங்களுக்குத் தெரிந்த விஷயம். எனக்கு இந்த மாசம் அசலே வரும்படி இல்லாமே தவித்தேன். கடவுள் கிருபை பண்ணி இந்த வேலை குடுத்தார். இன்னிக்கு ஒருநாள்தான் பொறுத்துக்கணும். மன்னிக்கணும். விடிஞ்சா கார்த்தி பண்டிகை. கையில் காலணு இல்லே. இதைச் செய்து குடுத்தா காலணு வரும்னு பொழைப்பெ உத்தேசிச்சு செய்யறேன்.

கிழவி:—போடா! போ! நோவாளியும், பிரஸவிச்சவளும் சாகரான்னு என்னென்னமோ அளக்கறயே! அவா செத்துத் தொலேச்சா அது நல்லதோ! இதோ பாரு.. இந்த பஞ்சப் பாட்டுப் பாடதே; ஒணும்னு மெஷினே தூக்கிண்டு கொல்லெப் புறம் போட்டுண்டு வேலை செய். இங்கே அடம் செய்யாதே!— என்று அப்பீல் கோர்ட்டு முடிவுபோல் கூறினள். பக்கத்து வீட்டுக்காரனும் இதையே ஆமோதித்து மண்டையை ஆட்டினுன.

இதற்குமேல் அந்த ஏழை தம்பதிகள் என்ன செய்வார்கள் பாவம்! தங்களைப் படைத்த பூமாதேவியைப் பார்த்துப் புலம்புவதைவிட வேறு தெரியாதவர்களாய் தலை குனிந்தார்கள். இதை இரவோடிரவு தைத்துக் கொடுத்தால் காலணு காசு வரும் என்ற ஆவலுடன் இருந்த இவர்களுக்குப் பெருத்த குழப்பமும் ஏமாற்றமும் ஆகிவிட்டது. "இம்மாதிரி தடங்கல் வந்துவிட்டதால் காலை குறித்த நேரத்திற்குள் தைத்துக் கொடுக்கமுடியுமோ, முடியாமற் போய் காணயம் தப்பி விடும்படியாகி விடுமோ!" என்ற பயமும், கலக்கமும் சூழ்ந்து கொண்டுவிட்டன.

---

## 7

தம்பதிகளிருவரும் கொல்லைப்புறமிருக்கும் இடத்தைப் போய்ப் பார்த்தார்கள். அங்கு ஒரே அழுக்கும் குப்பையும் ஒட்டடையும் நிறைந்து கிடந்தது. "இந்த இடத்தில் நல்ல துணிகளை எப்படிப் போட்டுத்தைப்பது? அழுக்காகிவிட்டால் என்ன செய்வது?" என்ற கலக்கத்துடன் வேணி கைக்கெட்டியவரையில் ஒட்டடை யடித்துப் பெருக்கிவிட்டுப் பாயை விரித்தாள். பின்னர் தம்பதிகள் இருவருமாக மெஷினைத் தூக்கிக்கொண்டு வந்து போட்டுக்கொண்டு, அங்கே தைக்க உட்கார்ந்தார்கள்.

காற்றில் விளக்கு நிற்காமல் குப் குப் என்று புகைத்து எரிந்து அணைந்துபோய் விடுகிறது. எத்தனை தரம் தீக்குச்சியைக் கிழித்து ஏத்தியும் பத்து நிமிட்கூட சேர்ந்தாற் போல் தைக்கவிடாமல் அவிந்துபோய் விடுவதால், இவர்கள் மனம் உடைந்துபோய்விட்டது. உள்ளே தனியாக இருட்டில் படுத்திருக்கும் குழந்தைகள் எங்கே எழுந்து பயந்து அழப்போகிறார்களோ என்ற ஒரு பெரிய பயம் அடிக்கடி தோன்றி வதைக்கிறது. "விளக்கு ஏற்றி ஏத்தி வத்திக்குச்சியும் ஆய்விட்டது இன்னும் இரண்டு மூன்று குச்சிகள் தான் பாக்கி இருக்கின்றன. இதுவும் ஆய்விட்டால் என்ன செய்வது? இந்த அர்த்த ராத்திரியில் வத்திக் குச்சிக்கு எங்கே போவது! ஈசா! இதென்ன சோதனை!" என்ற வேதனையுடன் இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொள்கிறார்கள்.

மூர்த்தி:—வேணி! நமக்குத் தொழில் க்ஷீணமாய்விட்ட போதிலும் ஆதியில் இடைத்த நாணயக்காரன் என்ற பேரும் நல்ல அபிப்பிராயமும் க்ஷீணமாகல்லே. இப்போ அதுவும் போயுடுமோ என்று பயமாயிருக்கே; இப்படி விளக்கு அவிஞ்சா என்ன செய்யறது?

வேணி:—நானும் அதுதான் யோசிக்கிறேன். கஷ்டம் மறைய தொழிலைக் காட்டின கடவுள் இப்படி எல்லாம் சோதனையும் பண்ணுவார்னு நான் நெனைக்கல்லே. இப்படி அணஞ்சா இருட்டிலே என்னமா தெக்க முடியும்! காலையிலெ அந்தம்மா வந்தா என்ன சொல்றது? பாதிகூட தெச்சாகல்லெயே.

மூர்த்தி:—வேணி! குழந்தை அழறாப்பலெ சப்தம் கேக்கறது. போய்ப் பாரு! இருட்டிலே பயந்துக்கப் போறது—என்றான்.

விளக்கு அணைந்துவிட்டது. மூர்த்தி தலையில் கையை வைத்துக்கொண்டு உட்கார்ந்துவிட்டான். வேணி எழுந்து சென்றாள்.

---

## 8

இருட்டில் தூங்கும் குழந்தைகளில் ராஜூ விழித்துக் கொண்டு எழுந்து பார்த்தான். எங்கும் இருட்டும் ஜன்னலால் தெரியும் சிறிது நிலவு வெளிச்சம்மட்டுமே இருப்பது கண்டு பயந்துபோய் வீறென்று அழுதுகொண்டே நிலை தெரியாமல் எழுந்து ஓடிவந்து தூணில் முட்டிக்கொண்டு, சுவரும் இடித்துக்கொண்டு கதவருகில் வந்தான்.

வீட்டுக்காரக் கிழவி பத்ரகாளித் தாயி படுத்தபடியே ஆவேசத்துடன், "என்னடா, சனியன் புடிச்ச எழவா இருக்கு! ஏண்டா அழறே? ஒங்கம்மாவே பூதம் முழுங்கிப்புடல்லே. மெஷின் ஓசை பேச்சுன்னுக்கா நீ பல்லவி பாட ஆரம்பிச்சுட்டாயோ! ஐயையோ உபத்திரவமே! அடி, வேணீ! வேணீ! இதோ பாரு! ஒஞ் செல்லம் ராக ஆலாபனை செய்யறது! வந்து சமாதானப்படுத்து" என்று கத்தினாள்.

அதே சமயம் வேணி அலறிக் கட்டிக்கொண்டு ஓடிவந்து, குழந்தையை வாரியணைத்து எடுத்துத் தோள்மீது சாத்திக் கொண்டே, "கண்ணு! ராஜூ! அழாதேடா சாமீ! என்

அப்பாவோன்னோ! பாட்டி திட்டுவா; அடிப்பா; நீ அழாதேடா ராஜா!"...என்று கொஞ்சியவாறு சமாதானம் செய்தாள்.

குழந்தை இக்கிக் கேவியவாறு, "அம்மா! இருட்டுலே எங்களே உட்டுட்டு எங்கே பூட்டே? அப்பா எங்கே?... பயம்மா இருக்கே" என்று அழுதான். அவனைத் தோள்மீது அணைத்துக்கொண்டே உள்ளே போய்ப் படுக்கவைத்துத் தூங்கச் செய்தாள்.

---

9

மைதிலியின் பொழுதுபோக்கிற்கு உயர்ந்த வகையில் நீதிகளையும், உலகானுபவங்களையும், சமூக சீர் திருத்தங்களையும் தேசபக்தி, தெய்வபக்தி முதலியவைகளையும் போதிக்கும் போராசிரியன் போன்ற உன்னதத் தமிழ் நாவல்களும், இதர புராண புத்தகங்களுந்தான் உயிர்த் துணையாயிருக்கின்றன. மிஞ்சிய நேரத்தில் தன் மூத்தாரின் குழந்தைகளிடம் வெகு பட்சமாயும் பொறுமையற்றதன்மையில் சமதிருஷ்டியோடும் அவர்களை வளர்க்கும் வேலையைத் தன் முழு மனத்துடன் ஒரு புனிதத் தொண்டாக எண்ணிச் செய்து வருவதில் பெரு மகிழ்ச்சிகொண்டாள்.

குழந்தைகளும் கிழத் தந்தையைவிட மைதிலியையே அதிகமாக நேசித்து வந்தார்கள். கிழவருக்கு மைதிலி எந்த விஷயத்தில் எப்படி நடந்துகொண்டபோதிலும் தன் விஷயத்தில் அவள் சரியாக நடந்துகொள்ளாத குறையை அவர் பெரும் பகையாயும் கடின குற்றமாயும் மதித்து வந்தார். ஆகையால் அவர் எந்த வழியில் மைதிலியை மயக்கலாம் என்ற பெரும் ஆராய்ச்சியில் இறங்கிவிட்டார்.

அன்று, அவர் வெளியில் போகும் ஜோரில் முகங் கழுவி, சரிகை வேஷ்டியுடுத்தி, தலைப்பாகை கட்டிக்கொண்டு ஜம் மென்று மாப்பிள்ளைபோல் அலங்கரித்துக்கொண்டு கண்ணாடியின் முன்பு நின்றார். வாயில் கட்டி இருக்கும் பல் காற்றம் காறியதால் அதைக் கழற்றி, பக்கத்திலிருந்த பேஸின் ஜலத்தில் நன்றாகக் கழுவித் துடைத்துக்கொண்டிருக்கையில், தூரவிருந்த மைதிலி கண்ணாடியின் பிரதிபிம்பத்தில் இவர் பல்லைத் துடைப்பதை யறிந்து,ஓட்டமாக ஓடிவந்துகிழவரின் கையைத் தட்டிவிட்டாள்.

பல் வரிசைகளில் ஒன்று தபாரென்று கீழே விழுந்து விட்டதும் மைதிலி அதைக் கையில் எடுத்துக்கொண்டு கிழவரின் முகத்தைப் பார்க்கிறாள்; பல்லைப் பார்க்கிறாள். வயிற்றில் நெருப்பு வைத்ததுபோல் பற்றி எரிகிறது! சோகத்தில் முதிர்ந்த ஒரு சிரிப்பு அவள் முகத்தில் ஜ்வலித்தது. கடகட வென்று சிரித்துக்கொண்டே பல்லைத் தூக்கிக்கொண்டு இரண்டடி நகர்ந்து, "தாதா! பேஷ்! பல்லு வெகு அழகா இருக்கே!" என்றாள்.

கிழவருக்கோ கோபம் நான்காவது அவதாரம்போல் பீறிக்கொண்டு வருகிறது. தான் பரம ரகஸ்யமாக வைத்திருந்த இந்தப் பல்லை இவள் எப்படியோ பார்த்துவிட்டாளே என்ற வேதனையும் வெட்கமும் சூழ்ந்துகொண்டன. கிழவர் மற்றொரு செட்டு பல்லை வாயில் மாட்டிக்கொண்டு மைதிலியைத் துரத்திக்கொண்டு ஓடி வந்தார். அவள், கையிலகப்படாமல் சுற்றி ஓடியவாறு, "தாதா! ஒரு வரிசைப் பல்லே ரொம்ப அழகா இருக்கே" என்று மீண்டும் வயிற்றெரிச்சலுடன் நகைத்தாள்.

இதற்குள் கிழவரின் பெண் அங்கே ஓடிவந்து, "என்னம்மா! அது என்னது? எனக்குக் காட்டு. அப்பா என்ன வாங்கிக் கொடுத்தா?"...என்று கேட்டது. கிழவருக்கு இச்சிறுமி வந்ததும் பின்னும் பயமும் வெட்கமும் பிய்த்துக்கொண்டுவிட்டன. ஒத்தைப் பல் வரிசையுடன், "அடீ மைதிலீ! வாண்டாம்; வாண்டாம். சொல்லாதே!...இப்படி குடுத்துடு. ஊம்...தெ. சனியனே மீனாட்சீ தூரப்போய்டு. இல்லாட்டா அடிப்பேன். அம்மா கைலே ஒண்ணுமில்லே" என்று கூறியவாறு மகளை இழுத்துத் தள்ளினார்.

மைதிலி, "தாதா! குழந்தையை என் தள்றங்கோ! மீனாட்சி! இதோ, பாரு! ஒங்கப்பாவின் பல்லு வரிசை; வேறொன்றுமில்லே" என்று காட்டிவிட்டாள். மீனாட்சி கடகட வென்று சிரித்துக்கொண்டே தகப்பனாரையும் பல்லையும் பார்த்துவிட்டு, "எம்பா! ஒனக்குப் பொக்கைவாயா? நெஜம் பல்லு கடையாது? அதான் நீ முறுக்கு, சீடை எல்லாம் சாப்படமாட்டேங்கறே...அடே முத்தூ! முத்தூ! இதோ பார்டா, அப்பாவின் பல்லு!" என்று தன் அண்ணனைக் கூவி அழைத்துக்கொண்டே ஓடினாள். கிழவர் ஆனை பலத்துடன் ஓடி வந்து மீனாட்சியை அடித்து இழுத்துத் தள்ளிவிட்டு, பல்லை லொடக்கென்று வாயில் போட்டுக்கொண்டு, "தடிக் கழுதை!

இதெ வெளியிலே சொன்னுக்கா மண்டெயெ ஓடச்சுப்புடு வேன் ; ஜாக்ரதை !"......என்று கூறிவிட்டு, மைதிலியை முறைத்துப் பார்த்துக்கொண்டே மீண்டும் கண்ணுடியின் அருகில்வந்தார்.

அதே சமயம் தபால்காரன் ஒருபார்ஸலைக் கொண்டுவந்து "சார், பார்சல்!" என்றான். இந்தக் குரலைக் கேட்டதும் கிழவர் அபாரமான சந்தோஷத்துடன் விழுந்தடித்துக்கொண்டு ஓடிவந்தார். இதற்குள் மைதிலி ஒரே பாய்ச்சலாய்த் தபால் காரனிடமிருக்கும் பார்ஸலை வாங்கிப் பார்த்தாள். அதன் மேல் "மன்மதபாண சஞ்சீவி" என்ற பெயர் காணப்பட்டதும், வயிற்றில் கபீரென்ற சங்கடமும், தாங்கமாட்டாத வெறுப்புடன் கலந்த கோபமும் உண்டாகியது. கிழவரையும் மருந்தையும் உற்று உற்றுக் கவனித்தாள். கடகடவென்று வெறுப்பும் பரிகாசமும் கலந்த ஒரு நகைப்பு நகைத்துவிட்டு, "தாத்தா! மறு ஜென்மம் எடுக்காமலேயே சின்னப் பிள்ளை, யௌவன வாலிபனாகப் போகிறாப்பலே இருக்கே!" என்றாள்.

இதற்குள் கிழவர் இவள் மருந்தை வாங்கிக்கொண்டு விட்டதைக்கண்டு கோபத்துடன் தபால்காரனை முறைத்துப் பார்த்தபடியே கையெழுத்துப் போட்டுக் கொடுத்துவிட்டுத் திரும்பினார். அப்போதுதான் மைதிலியின் நகைப்பும் அந்தக் குறும்பான பாணம்போன்ற வார்த்தைகளும் காதில் பட்டன. ஆத்திரத்துடன் "ஹி! ஹி! ஹி!" என்று நங்கு காட்டும் முறையில் சிரித்துக்கொண்டு, "மோரக் கட்டையைப் பாரு. தே...வெளையாடாதே; மரியாதையாஇப்படிக் கொடுத்தூடு.... ஐயோ! பிரிக்காதே, மைதிலீ! மைதிலீ! சொல்றதைக் கேளு, பிரிக்காதே ; அது என்னுதில்லே;சேஷப்பருடையது" என்று கூறிக்கொண்டே, மைதிலியின் கையிலிருந்து அதைப் பிடுங்கத் தாவினார்.

இதற்குள் மைதிலி சிட்டுக் குருவிபோல் பறந்துவேறு இடம் ஓடியவாறு, பார்சலைப் பிரித்துப் புட்டியைக் கையில் எடுத்துக்கொண்டாள். கிழவரும் விட்டபாடில்லை. ஓடோடி வந்தார். அந்தக் கூடத்தை மூன்று முறை ஓடி ஓடி மைதிலி சுற்றினாளே யன்றி, மருந்தைக் கொடுக்கவில்லை.

கிழவரும் விடாமல் சுற்றி, மைதிலியைப் பிடித்துக் கையி லிருந்த புட்டியை இழுக்கப்போனார். மைதிலி கண்களில் தீப் பொறி பறக்க, "என் கையை விடுங்கள். மன்மத பாண சஞ்

சிவியா வேணும்? ஏன் மன்மதனே கேரில் வந்து பாண ப்ர யோகம் செய்தால் இன்னும் இளமையும், யௌவன சுகுமார மும் வந்தூடுமே. இந்தக் கிழத்திற்கு மருாது ஒரு கேடா?” என்று கூறியபடியே மருந்து புட்டியை வீசி எறிந்தாள். இவள் மனத்தில் சிதறி அலையும் வேதனையைக் காட்டுவது போல், புட்டி சுக்கல் நூறுக உடைந்து மருந்து சிதறி யோடியது. மைதிலி, கையைத் திமிறிக்கொண்டு வேறு புறம் சென்று நின்றாள்.

கிழவரின் கோபத்தைக் கேட்கவேண்டுமா! “ஆஹ்ஹா! என்ன செய்தே?” என்று உறுமிக்கொண்டு, மைதிலியை அடிப்பதற்குக் கையை ஓங்கிக்கொண்டு வந்த சமயம், கிழவ ரின் மூத்தமகன் பள்ளிக்கூடத்திலிருந்து வந்துவிட்டவன், தற்செயலாகப் பார்த்து, புத்தகத்தைப் போட்டுவிட்டு ஓடி வந்து தகப்பனுரைத் தடுத்து, “ஏம்பா! வெறும்மெ சித் தியை அடிச்சு கொல்றெ? ஐயோ பாவம்! அவளுக்கு யார் இருக்காப்பா! அவ அழறு பாரு!” என்று தடுத்தான்.

கிழவரின் கோபம் இன்னும் பொங்கியது “ஆமாண்டா! தறுதலைப் பயலே! நீ சிபார்சுக்கு வந்தூட்டயோ! போடா வெளியே” என்று பையனின் கழுத்தைப் பிடித்துத் தள்ளிய தள்ளில் அவன் உருட்டியடித்துக்கொண்டுபோய் விழுந்தான். கிழவரின் ஆத்திரம் சரியான உச்சஸ்தாயியை எட்டிவிட்ட சமயம் சேஷப்பர் தொந்தியைத்தடவிக்கொண்டே, “ஏண்டா வேதாசலம்! பார்சல் வந்துடுத்தோ! தபால்காரன் இங்கே எதிரப்பலே இருந்தது. ஒனக்கு மாத்திரம் வந்ததா! எனக்குக் கூடவா?” என்று கேட்டுக்கொண்டே கூடத்தை அடைவதற்குள், கிழவர் தலையிலடித்துக்கொண்டு, வாயைமூடும் படி சேஷப்பருக்குக் கையால் சமிக்ஞை காட்டிக்கொண்டே ஓடினர். அதைப் பார்த்த மைதிலிக்கு அந்த நிலைமையிலும் கடகடவென்று நகைப்பு வந்துவிட்டது. பெரிய சத்தமிட்டுச் சிரித்தாள்.

அச்சமயம் அவள் உள்ளத்தைக் கொள்ளைகொண்ட தேவகானம்—கந்தர்வகானம், மாநிலத்தில் மானிட வாழ்க் கையை உய்விக்கும் மகிமை கானம், வானக்குயிலின் அம்ருத நாதம் போன்று ஒலிக்கும் இனிய கானம்—வழக்கம்போல் கேட்டது. மைதிலியின் தேகமே மயிர் சிலிர்த்தது. அவ ளுடைய நகைப்பு முற்றும் அந்த விநாடியே மறைந்துபோய் அவள் உள்ளத்தினின்று எழுந்த ஒரு புதிய சக்தி அவளை

ஜன்னலண்டை இழுத்துச்சென்றது. முகம் ஓரே நிலையில் நின்றது கண்கள் மெய்மறந்து ஆனந்தத்தினால் சற்றுநேரம் மூடுவதும், பின்னும் திறப்பதுமான ஒரு தனிச் சுடருடன் பிரகாசித்தன. அவள் அனுபவிக்கும் கானமாவது:—

(ஹைறசுனியாமே—என்ற மெட்டு)

தூய்மையினாலே துன்பம் வென்றிடலாம்
துணிந்தெழுவாய் மட நெஞ்சமே!—
அச்சுதன் அருள் நம்பி (தூய்)

கடல் பெரிதெனினும் கப்பல் சிறிதெனினும்
இடர் பல வரினும் தடுத்துமுன் நீந்தியே—
கடல் கடப்பது கப்பலே (தூய்)

இந்த அருமையான பாடலை ஒரு சரணம் பாடியதும் தாழ்ந்த குரலில், "ஆமாம், ஆமாம்! கடல் மகாபெரிது ஆழமும், கரையும் காணாது. ஆனால் அதில் தைரியமாக ஒரு சிறு கப்பல் கிளம்பி அதைக் கடக்க முன் வருகிறது. அக் கப்பலை அப்படியே கவிழ்த்து ஆபத்துண்டாக்குவதற்குப் பெரிய திமிங்கிலம் முதலிய நீர் வாழ் ஜந்துக்களும், கடல் மலை முதலியனவும் தயாராயிருக்கின்றன. அது போதாதற்குச் சில சமயம் புயலும் காற்றும் பெரு மழையுங்கூட வாடி வதைக்கின்றன. ஆனால், மாலுமியின் சாமர்த்தியத்தினால் கப்பல் சேதமின்றி அக்கரை சேர்ந்துவிடுகிறது. இதுதான் உலக ரகஸ்யத்தின் தத்துவம்! கப்பலுக்கு மாலுமி எப்படியோ, அப்படி மனிதனாகிய கப்பலுக்கு மனமாகிய மாலுவே அத்யாவசியம்!

கப்பலின் மாலுமி சிறிது அஜாக்கிரதையாக இருப்பானாயின், கப்பல் பெரும் ஆபத்துக்கு ஆளாவதோடு, அக்கப்பலை ஆதாரமாக நம்பி ஏறியுள்ள ஜனங்களுக்கும், பண்டங்களுக்கும் பேராபத்து விளைந்துவிடும். அதேபோல் மனித வாழ்க்கைக் கப்பலை நடத்திச் செல்லும் மாலுமிபோன்றுள்ள மனது சற்று அஜாக்கிரதையாய், ஆசாபாச மோகங்களாகிய விபத்துக்களில் சிக்கிவிடுமாயின், பேராபத்துக்கும், விபரீத பாபக் குவியலுக்கும் பங்குதாரராகவும், துன்பமே உருவாகவும் ஆய்விடும். இம் மனிதக் கப்பலையே சாத்வதமாக நம்பியுள்ள பெண்டு பிள்ளைகள், மக்கள் மனிதர்கள் முதலிய எல்லோரையும் இவனுடைய அஜாக்கிரதையே சிதறப் பதற அடித்து விடும். ஆகையால், சம்சார சாகரத்தைக் கடக்க மனமாகிய மாலுமி, வெகு பக்குவமாய்த் தெய்வபக்தியும், உறுதியும் வழு

வாமல் இருந்தால். அச் சாகரத்தைக் கடந்து கடவுளின் பாதங்களாகிய அக்கரையை அடைந்து இன்புறலாம். ஏ, மட நெஞ்சே! தெளிந்து அறிந்துகொள்; மயங்காதே! தயங்காதே!

மாலுமி மரக்கலம் காத்தற்போல் மணிதர்க்கு
வாழ்க்கைக் கடல் கடந்து வானுலக மேகிட—
மாலுமியாம் மனமே (தூய்)

என்ற மற்றோர் அடியைப் பாடியவாறு கீதத்தின் ஒலி வெகு தூரம் போய்விட்டது. அதியற்புதமான கானத்தின் அழகும் அர்த்தமும் பேரானந்தமுமே மைதிலியின் புண்பட்ட வாழ்க்கையை நடத்திச் செல்லும் ஜீவசக்தியாய், வாழ்க்கையின் நாதமாய் அமைந்தன.

---

## 10

வேணி, "மணி 8 அடிக்கப்போகிறது, எப்படி தெச்சாகப் போகிறதுன்னு பயப்பட்டதுக்குக் கடவுள் எப்படியோ ஒரு அபரிமிதமான சக்தியைக் கொடுத்துக் காரியத்தை முடிச் சுட்டார். இதெல்லாம் தான் தெய்வச்செயல் என்பது" என்றாள்.

மூர்த்தி:—வேணீ! எப்போதும் நம்பினவாளை அந்த பரம் பொருள் கைவிடவே மாட்டான். எல்லாம் அவனருள்.

வாஸந்த:—அப்பா! வாத்தியாரம்மாவும், இன்னொரு அம்மாவும் வாராப்பா!

மூர்த்தி:—அம்மணீ! வாருங்கோ; வாருங்கோ! (வேணி, பாயைப் போட்டு உட்காரச் சொல்லுகிறாள்) மூர்த்தி, தைத்த துணிகளை ஒழுங்காக மடித்து வைத்திருப்பதை எடுத்துக் காட்டி, பழந்துணிகளையும் கணக்குப்படிக்குக் கொடுத்துவிட்டு) அம்மணீ! சரிதானே!

வந்தவள்:—(துணிகளைப் பிரித்துப் பார்த்துவிட்டு) ஆஹா! தர்ஜீ! நீர் ஏதோ வீட்டுக்குள்ளே சின்ன தையல்காரனாட்டம் உட்கார்ந்து தெக்கறீரே. யன்றி வேலை ஷாப்பு வேலையைவிட அற்புதமாயிருக்கே .........வாத்தியாரம்மா, பாத்திங்களா!... என்ன அழகா தெச்சிருக்கார்? தர்ஜீ! இதுக்கெல்லாம் என்ன கூலியாச்சு?

மூர்த்தி:—அம்மா! நான் எப்போதும் ஓரே கூலிதான் வாங்கரது...எல்லாத்துக்கும் சேத்து நாடா, டேப்புகள், ரிப்பன்கள் உள்பட 5 ரூபாயாறது.

வந்தவள்:—என்ன? அஞ்சு ரூபாயா! அடாடாடா!...... போன தபா நான் நாலு கவுனும் ரெண்டு சொக்காயும்

தெக்கச் சொல்லி ஒரு ஷாப்புலெ குடுத்தேன். அதுக்குமட்டும் 4 ரூபா வாங்கிட்டானே. ஒரு ஜாக்கெட்டுக்கு நீர் ரெண்டு அணுவா போட்டீர் ?

மூர்த்தி:—தாயே, ஆமாம்! அதையாவது ஸ்வாமி தவரூது குடுத்தா போதும். எனக்குப் போட்டி போட்டுப் பேராசைப்பட இஷ்டமில்லே அந்தமாதிரி எண்ணமே இது வரையில் குடுக்கல்லே இனிமேயும் குடுக்காதிருக்கும்படித் தான் வேண்டிக்கிறேன்.

வந்தவள்:-இந்த மாதிரி உத்தம குணத்தைக் காண்பதே அரிது நான் ரொம்ப அவசரமா வேலெ குடுத்துச் சிரமப் படுத்திவிட்டேன். இதோ பணம்—என்று 5 ரூபாய் நோட்டையும், கூட இரண்டு ரூபாயையும் சேர்த்துக் கொடுத்துவிட்டு—இதையும் வாங்கிக்கணும், அவசரமாக வேலே செய்ததுக்கு அதிகப்படி, இது. இதே வேலெயே ஷாப்பிலே இருந்தா 15 ரூபா கட்டாயம் பில்லு போடுவான். நான் வரட்டுமா? உங்களுக்கு ரொம்ப வந்தனம்—என்று கூறியவாறு துணி மூட்டையுடன் எழுந்தாள். வாத்தியாரம்மாவும், இவர்களுக்கு வந்தனம் செய்துவிட்டு, "ரொம்ப சந்தோஷம்! நாங்கள் போய் வருகிறோம்" என்று விடை பெற்றுச் சென்றாள்.

குழந்தை வாஸந்திக்கும் ராஜூவுக்கும் இந்த ரூபாயைப் பார்த்தவுடனே உண்டான சந்தோஷத்திற்கு எல்லேயே இல்லே. முகத்தில் சிரிப்பும் இன்பமும் தாண்டவமாடுகிறது. ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டு குதித்தபடியே தமக்குப் பட்டாசு நிச்சயமாய்க் கிடைத்துவிடும் என்ற நம்பிக்கையுடன் மகிழ்ந்தார்கள். மூர்த்தியும், வேணியும் குழந்தைகளைப் பார்த்துப் பரம சந்தோஷம் அடைந்தார்கள்.

மூர்த்தி:-வேணீ! கடவுள் கிருபையில் கார்த்திகைப் பண்டிகைக்கு குறைவில்லாமெ கிடைத்துவிட்டது. நீ வெந்நீர் போடு. நான் கடைக்குப் போய் சிக்கிரம் எண்ணெய், சீக்கா பொடி, திரிநூல், அகல்கள், ஸ்வாமி நிவேதனத்துக்கு வேண்டிய சமான்கள் எல்லாம்... ......என்று முடிப்பதற்குள், வாஸந்திகா ஓடிவந்து, பிதாவைக் கட்டிக்கொண்டு, "ஏம்பா, பட்டாசு!" என்றாள். மூர்த்தி சந்தோஷத்துடன் அவளைத் தட்டிக்கொடுத்துவிட்டு, "கண்ணே வாஸந்திகா! பட்டாசு இல்லாமெயா? அது கூடத்தாண்டாப்பா வாங்கப்போறேன். எல்லாம் வாங்கிண்டு வறேன்......குழந்தைகளுக்கு எண்ணெய் தேய்ச்சு நீயும் தேய்ச்சுக்கோ; நான் போய்வறேன" என்றான்.

ராஜா:—"அப்பா ! மத்தாப்பு, புருசுவத்தி, கம்பிவத்தி எல்லாம் வாங்கிண்டு வாயாப்பா!"—என்றான்.

அவனைத் தூக்கியணைத்து முத்தமிட்டுப் பின், "கண்ணே! எல்லாம் வாங்கிண்டு வறேன்" என்றான். இதற்குள் வேணி எண்ணெய்ப்பாத்திரம் கொண்டுவந்துகொடுத்தாள். மூர்த்தி, அதை எடுத்துக்கொண்டு சந்தோஷமாகச் சென்றான். குழந்தைகளும் பட்டாசு வரும் என்ற ஆவலுடன் எதிர் பார்த்துக்கொண்டே வழியனுப்பினார்கள்.

---

## 11

மூர்த்தியின் இதயம் சந்தோஷமயமாக மாறி நிறைந்தது. முதலில் பட்டாசுக் கடைக்குச் சென்று ஓருருபாய்க்குப் பட்டாசு,மத்தாப்பு முதலியவைகளை வாங்கிப் பையில் போட்டுக்கொண்டான். அகல்களும் சட்டிப் பானைகளும் விற்கும் கடைக்குச்சென்று அவற்றை வாங்கினான், எண்ணெய்,திரிநூல், கற்பூரம், தேங்காய், பழம், வெல்லம், காய்கரிகள்முதலிய சகலமும் வாங்கிக்கொண்டு, சாமான்களைப் பார்க்கும்போது அவன் சந்தோஷத்திற்கு இச் சாமான்கள் சிகரம் வைத்தது போல் தோன்றின. இப் பட்டாசைக் கண்டதும் குழந்தைகள் எவ்வளவு சந்தோஷப்படுவார்கள் என்று நினைக்கும்போது அவனுடைய ஆனந்தம் கரைபுரண்டது. பையில் சாமான்களையும், துணி மூட்டையில் காய்கறிகளையும் கட்டித் தோள் மீது போட்டுக்கொண்டும் எண்ணெய்த் தூக்கைக் கையில் பிடித்துக்கொண்டும் சீக்கிரமாக வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

கார்த்திகைப் பண்டிகையின் குதூகலத்தினால், குழந்தைகள் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்துவிட்டு, புதிய உடை உடுத்திக்கொண்டு பட்டாசு சுட்டுக்கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு வீட்டு வாசற்படியிலும் மாவிலைத் தோரணங்களும், மாக்கோலங்களும் வெகு அற்புதமாயிருந்தன. சிலர் அவ்வருடம் கல்யாணம் செய்த பெண்களை மாமியார் வீட்டிற்குச் சீர் வகைகளோடு கொண்டுவிடும் காட்சிகளையும் பார்த்துக்கொண்டே, மூர்த்தி, "நம் வாஸந்திகாவுக்கும் விவாகமாகிவிட்டால், இப்படித்தானே மாமியார் வீட்டிற்குப்

போவான்''...என்று எண்ணியபடியே ஆனந்தத்துடன் நடக்கிறான்.

அச் சமயம் இரண்டு பெரிய வடக்கத்திக் காளை மாடுகள் பூட்டிய வில் வண்டி கணகணவென்று மணியொலிக்க, கடகட வென்று பறந்துகொண்டு வந்தது. எதிரில் வந்த மோட்டார் லாரியின் பேரிரைச்சலையும் வேகத்தையுங் கண்டு புதிதாக வாங்கப்பட்டு வந்துள்ள காளை மாடுகள் மிரண்டுபோய் வண்டியைத் தாறுமாறுமாக இழுத்துக்கொண்டு ஓடியதில், எதிரில் வந்த மூர்த்தி ஏர்க் கால் பட்டுக் கீழே விழுந்துவிட்டான்.

அந்தோ! பரிதாபம்! பரிதாபம்! மூர்த்தியின் சாமான்கள் மூலைக்கொன்றாகச் சிதறி யடித்துக்கொண்டு ஓடிவிட்டதையும், கீழே அடிப்பட்டுக் கிடக்கும் மூர்த்தியையும் காண கும்பல் கூடி ஓரே கூச்சலும் கலாட்டாவாகவும் ஆகிவிட்டன. எரிகிற வீட்டில் பிடுங்கியது லாபம் என்றதுபோல் மூர்த்தியின் சாமான்கள் மூலைக்கொன்றாகச் சிதறியதைக் கண்ட சில சோதரர்கள், ஆளுக்கொன்றாக எடுத்துக்கொண்டு, ஓட்டம் பிடித்தார்கள். எண்ணெய் பூமா தேவிக்கு ஸ்நானமாக அர்ப்பணமாகியது! வரும்பொழுது மூர்த்தியின் ஆனந்தம் இருந்த வேகமென்ன! இப்போது உடைந்து சிதறிப் போய் விட்ட விபரீதமென்ன! என்னே உலகம்! என்னே மனித வாழ்க்கை!!

---

## 12

தந்தை வரவை நிமிடத்திற்கு நிமிடம் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் குழந்தைகளின் உள்ளத்தில் பொங்கி எழும் ஆவல் வெள்ளத்தை யாரால் அளவிட முடியும்? அரை நிமிடத்திற்கொரு முறை உள்ளே ஓடிப்போய், ''ஏம்மா இன்னம் அப்பா வரல்லே? அப்பா எப்போ வருவார்?'' என்று வாஸந்தியும், ராஜுவும் வேணியைக் கேட்டுத் தொந்தரவு செய்வதும், மீண்டும் வீதியில் வந்து நிற்பதும், சற்றுத் தூரத்தில் சாமான்களுடன் வரும் ஒவ்வொருவரையும் ''அதோ அப்பா! அதோ அப்பா!' என்று கூறி ஏமாறுவதுமாகத் துடி துடித்து வழியை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அச்சமயம் வீதியில் ஓர் இரட்டை மாட்டு வண்டி வந்து நின்றதும் குழந்தைகளின் ஆவல் பின்னும் அதிகரித்து, தம் பிதாதான் வண்டியில் வந்திருப்பதாக எண்ணி, ''அப்பா!

வாங்கிண்டு வந்துட்டயா?'' என்று கூவிக்கொண்டே படி இறங்கி ஓடி வந்து வண்டியை எட்டிப்பார்க்கும்போது, அந்த வண்டியில் தலையிலடிபட்டு ரத்தம் பெருகும் காயத்துடன் மூர்த்தி படுத்திருப்பதை யறிந்து, அப்படியே அலறிப்போய் "அப்பா!... அப்பா!''...என்று கத்தினார்கள்.

இதற்குள் வண்டிக்காரன் இறங்கி, வாஸந்தியை நோக்கி, "அம்மா! கத்தாதே! ஓங்க உள்ளு எது, காட்டு! அவரே கொண்டு உட்றேன்'' என்றான். வாஸந்தி தாங்கமாட்டாத விசனமும், ஆத்திரமும் பொங்கியவளாய் வண்டிக்குள் சடக் கென்று ஏறிக்கொண்டு, "அப்பா! அப்பா! ஏம்பா காயம் பட்டுது? எங்கேப்பா வியுத்தே?...கண்ணெ தறந்து பாரப்பா! அப்பா! ஐயோ! அப்பா பேசல்லயே, வண்டிக்காரா! எங் கப்பாவுக்கு என்ன வந்துது? எங்கே இந்த அடிப்பட்டுது? சொல்லேன்''...என்று கண்ணீர் வழிய, கதறிக்கொண்டே கேட்டாள்.

வீதியில் போவோர் வருவோர் இந்தக் கூக்குரலைக் கேட்டுக் கூட்டங்கூடி, "என்ன! என்ன!'' என்று வண்டியைச் சூழ்ந்துகொண்டார்கள்.

வண்டிக்காரன் கூட்டத்தை விலக்கிக்கொண்டு; வண்டிக் குள் தலையை நீட்டி வாஸந்தியை நோக்கி, அம்மா! நீ ஏன் இப்படிக் கூச்சப் போட்றே; கும்பு கூடிப்போறது. இந்த மாடு மெரண்டு தாறுமாறு வண்டியை இஸ்திகினு ஓடச்சே இவரு எதிரே வந்து எக்கசக்கமா உயிந்துட்டாரு. எங்க எஜமான் அங்கேயெ எறங்கிகினு இவரே ஊட்டுலே வுட்டுட்டு வரச் சொன்னாரு. நீ எறங்கு, இவரே உள்ளே கொண்டு போவலாம்'' என்று வாஸந்தியை இழுத்துக் கீழே இறக்கினான்.

பிறகு, மூர்த்தியை ஆட்டுக் குட்டியைப்போல் தூக்கிக் கொண்டு படி ஏறினான். வாஸந்தி கண்ணீர் பெருகப் பொங்கும் துயரத்துடன் முன்னே வழி காட்டிச் சென்றாள். ராஜு இன்னும் குழந்தையாகையால், அதற்கு ஒன்றுமே தோன்றாது கிலி பிடித்துப் போய்விட்டது! சிறிது பேசக்கூடத் தோன்ற வில்லை. தன் தமக்கையை நோக்கி, "என் அக்கா! அப்பா பட்டாசு வாங்கிண்டு வரச்சே அதை யாராவது திருடன் பிடுங்கிண்டு அப்பாவே அடிச்சுட்டானா?'' என்று அவன் சிறிய புத்திக்குத் தோன்றியதைக் கேட்டான்.

வாஸந்தி பதிலே சொல்லாமல், "பேசாமெயிருடா! சனியனே!" என்று தான் பெரியவள் என்கிற அதிகாரத்தை யும் விடாமல் காட்டிக் கொண்டே உள்ளே சென்றாள். வண்டிக்காரன், மூர்த்தியைத் தூக்கிக் கொண்டு வந்தான். ராஜுவும் பின்னாலேயே ஓடி வந்தான். விதி யாரை விட்டது? சற்று முன் நடந்ததும், இனி நடக்கப்போவதும் யாராலறிய முடியும்? எல்லாம் அவன் செய்யும் லீலா விநோதத்தின் மகிமையல்லவா! பட்டாசு வாங்கிக்கொண்டு வருவதாகச் சென்ற மனிதனை ஆவலோடு எதிர்பார்க்கும் குழந்தைகள் எப்படிக் கண்டார்கள்? விதியின் வலிமையை மாற்றல் அரிதன்றோ?

---

## 13

அன்று மகோன்னதமான கார்திகைப் பண்டிகையாகை யால், வேணி அவள் இருக்கும் சிறு விடுதியைப் பெருக்கி மெழுகிப் பின்னர் ஸ்வாமியைப் பஜித்தபடியே அவரது சன்னி தானத்தின் முன்பு கோலமிட்டுக் கொண்டே, "ஜகதீசா! உன்னுடைய கிருபா கடாக்ஷம் என்றும் இவ்வேழைமீது நிலைத்திருந்தால் போதும். அதிக ஆசை அதிக நஷ்டம். அன்றாடம் கஞ்சிக்கு வேண்டிய மட்டும் தொழில் காட்டினா யானால் போதும். உன்னடியார்கள் வருந்திக் கஞ்சிக்குத் தவித் தால் அந்த வருத்தம், அவமானம் உனக்கில்லையா?" என்று வேண்டும் பொழுது, வாஸந்தி பெரிய குரலால், "அம்மா! அம்மா! அப்பாவெ பாரேன்...ஐயோ! தலையிலே ரத்தம் வழியறதே. கண்ணைத் திறக்கவே இல்லியே! பேசவே மாட் டேங்கறாரே!" என்று கத்திக்கொண்டே ஓடிவந்து, கயித்துக் கட்டிலில் பாயை விரித்து, அதில் விடும்படி வண்டிக் காரனுக்குக் கூறினாள்.

ஈச்வர தியானத்தில் மெய்ம்மறந்து துதிக்கையில், பேரிடி போன்ற இவ்வார்த்தைகளைக் கேட்டதும், வேணி கதிகலங்கிப் போய், கையிலிருந்த மாவு கொட்டாங்கச்சி கீழே நழுவுவது கூடத் தெரியாமல் அலறிக்கொண்டு ஓடி வந்தாள். அவளுக்கு ஒன்றுமே தோன்றாமல், ஆகாயமும் பூமியும் ஒன்றாய்ச் சுழல்வது போன்ற வேதனையுண்டாகிவிட்டது. "வாஸந்தி! என்னம்மா அப்பாக்கு என்ன?...வண்டிக்காரா! என்னப்பா சமாசாரம்! சீக்கிரம் சொல்லேன்" என்று கேட்டுக்கொண்டே

ஒரு செம்பில் வெந்நீர் கொண்டுவந்து, துணியில் நனைத்து மூர்த்தியின் தலையில் வழியும் ரத்தத்தைத் துடைத்தாள்.

இதற்குள் வாஸந்தி விசிறி கொண்டுவந்து விசிறுகிறாள். ராஜூ, பேந்தப்பேந்த விழித்தபடியே அம்மாவையும், அப்பாவையும் மாறி மாறிப் பார்க்கிறான்; ஒன்றுமே தோன்றாது இடிந்துபோய்விட்டான்! வண்டிக்காரன் உண்மையில் பரிதாபத்துடன், அம்மா! எங்க எசமான் ரெண்டு வடக்கத்தி காளெங்களெ இப்பதான் புடிச்சாந்தாரு. அது இன்னும் இந்த ஊரு மோட்டாக் காருங்க கிட்ட பயகலீங்க. அதெக் கட்டிக்கினு எங்க எசமான் கடெத்தெரு பக்கம் போனாருங்க. எதிரே ஒரு மோட்டாரு பெரிய பூதம்போல் வந்திடுச்சு. அதெப் பாத்து காளெ மெரண்டுபோய் தாறுமாறு வண்டியெ இஸ்திகினு ஓடித்துங்க...

அப்போ இந்த ஐயா ஏதேதோ சாமானுங்க வாங்கிகினு வந்தாரு. அந்தப்புறம் மோட்டாரு, இந்தப்புறம் மாட்டுவண்டி, நடுவுலே ஐயா மாடுமுட்டி வுயுந்துட்டாரு. நானு சாமர்த்தியமா வண்டியே இஸ்து புடிச்சித் திருப்பினேன். அதனாலேதானுங்க இந்த மட்டும் மிஞ்சிச்சி. சாமானுங்கல்லாம் சோதா பசங்க ஆளுக்கு ஒண்ணு தூக்கிகினு பூட்டாங்க...

இவரு கீயே உயிந்ததும் நான் மாட்டெ கட்டிப்புட்டு கிட்ட போயி விசாரிச்சேனுங்க, இந்த ஊடுன்னு சொன்னாரு. அப்பறந்தான் மயக்கம் வந்திடிச்சி. எங்க எசமான் வண்டிலே உட்டு ஆட்லே கொண்டுபோயி உட்டுடுன்னாரு. தூக்கியாந்தேன். அழுவாதீங்க! நல்ல மருந்து போட்டு கட்டுங்க! ஐயோ! மணி ஓசை கேக்குதுங்க...காளெ பிச்சிகிச்சோ என்னமோங்க?" என்று கூறியவாறு ஓட்டமாக ஓடிவிட்டான்.

வேணியின் இதயம் தத்தளிக்கிறது. தண்ணீரை முகத்தில் தெளித்து வாயிலும் வார்த்துப்பார்த்தும் பேச்சு மூச்சே இல்லை. வாஸந்தி அடங்காத விசனத்துடன், "அப்பா! அப்பா! கண்ணெ தெறந்து பாரேன்; அப்பா! அப்பா!...... ஐயோ! கண்ணெயே தறக்கல்லேயே... அம்மா! என்ன பண்றதும்மா?" என்று கலங்கினாள்.

வேணி, தனக்குத் தெரிந்த கை மருந்துப் பொடியொன்றைத் தலைக்கு வைத்துக்கட்டவாரம்பித்தாள். வாஸந்திக்கு இருப்புக் கொள்ளவில்லை. "அம்மா! நீ அப்பாவே

ஜாக்கிரதையா பாத்துக்கோ! நான் இதோ ஓடிப்போய் டாக்டரை அழைச்சுண்டு வரேன்'' என்று கூறி எழுந்தாள்.

வேணி:—அசடே! எந்த வைத்தியனை நீ கூட்டிண்டு வர முடியும்? பணம் வைக்காமே யாருமே வரமாட்டாம்மா! அதோடே நீ சின்ன பொண்ணுச்சே; ஒன்னெ யார் லக்ஷியம் பண்ணுவா?

வாஸந்தி:—நீ பேசாமெ இரும்மா! நான் ஒரு நிமிஷத்துலெ ஓடிப்போய் அழைச்சிண்டு வரேன்; ஜாக்கிரதையா பாத்துக்கோ; தடங்கல் பண்ணாதே—என்று ஆவேசத்துடன் சொல்லி கொண்டே ஒரே ஓட்டமாக ஓடி மறைந்துவிட்டாள்.

வேணி கடவுளைப் பிரார்த்தனை செய்தபடியே உட்கார்ந்திருக்கிறாள்.

---

## 14

ஆவேசத்துடன் கிளம்பிய வாஸந்தி இரண்டு மூன்று தெருக்களைத் தாண்டி, ஓட்ட ஓட்டமாக ஒரு பெரிய வைத்தியரின் வீட்டுப் படி ஏறி உள்ளே ஓட முயன்றாள். வீதியில் காவலிருந்த பாராக்காரன், இச்சிறுமியின் கையைப் பிடித்து இழுத்து நிற்க வைத்து, "ஏய்! எங்கே இத்தனை தைரியமா பெரிய வீட்டுக்குப் பெண் கொடுத்தாப்லே போரே! நான் இங்கே நிக்கறது தெரியல்லே! என்ன முழிகிப்போனாப்பலே ஓட்றே?'' என்று அதட்டினான்.

வாஸந்திக்கு ஏற்கெனவே உள்ள துக்கத்துடன், இந்த மிரட்டல் பின்னும் மனத்தைக் கிளறியது. அவளுடைய தைரியத்தை அப்போதும் விடாமல், "இதோ பாரு! எங்கப்பாவெ ஒரு பெரிய மாடு முட்டித்தள்ளி மண்டெலே அடிபட்டுக் கீழே விழுந்து மயக்கமாய்ப் பூட்டா. ரத்தம் வழியறது! சீக்கிரம் டாக்டரெ அழச்சிண்டு போக வந்தேன். என்னெ விடு!'' என்று மீண்டும் திமிறிக்கொண்டு உள்ளே ஓடப் பார்த்தாள்.

வேலைக்காரன் தடுத்து, "ஏ பொண்ணே! இப்போ டாக்டரெ பாக்கவே முடியாது. அவர் ஒரு ஆபரேஷன் கேஸில் இருக்காரு. ஆயிரம் ரூபா கொடுத்தாலும் இப்ப வரவே மாட்டாரு. நீ வேறே யாரையாச்சும் அழைச்சிண்டு போய் சீக்கிரம் பாரு. ஐயோ பாவம்! போம்மா! அழாமெ போ!'' என்றான்.

துள்ளிக் குதித்த ஆவல் வாஸந்தியின் மனத்தில் உடைந்தது. அவளுக்குப் பெருங் குழப்பமும், திகிலும் உண்டாகிவிட்டதால், தள்ளாடிக்கொண்டே படி இறங்கிவிட்டாள். எதையோ தீர்க்கமாக யோசிப்பதுபோல் சிறிது நின்ருள். அவளுடைய மூளையில் ஏதோ ஓர் நூதன உணர்ச்சியுடன் கூடிய யோசனை உதயமாகியதால், அவளுடைய முகம் சடக்கென்று மலர்ந்தது. கண்களில் ஜீவசக்தி பிரகாசித்தது, நன்கு விளங்கிவிட்டது. உடனே மானைவிட அதிக வேகமாக ஓட ஆரம்பித்தாள்.

அங்கு பிடித்த ஓட்டம் சில நிமிடத்திற்குள் அவளுடைய பள்ளிக்கூடத்திற்குள் சென்று தலைமை உபாத்யாயினியின் அறையில் நின்ருள். ஓடி வந்த வேகத்தின் அதிர்ச்சியினுல் மூச்சு துரத்துகிறது வெயர்வை வெள்ளமாகக் கிளம்பி வருகிறது. அங்குள்ள வேலைக்காரன் அவ்வறையிலுள்ள எஜமானியின் புத்தகங்கள் உள்ள பீரோக்களையும், கண்ணுடி மேஜை, நாற்காலி முதலியவற்றையும் துடைத்துக்கொண்டிருந்தான்.

அந்தச் சமயம் வாஸந்தி இத்தனை அலங்கோலமாக வந்து நின்றதைப் பார்த்து வியப்புற்று, "என்னம்மா! இன்னிக்கு லீவுன்றது மறந்துட்டயா! இன்னிக்குக் கார்த்தி பண்டிகை இல்லே! பள்ளிக்கூடம் கடயாதம்மா! ஏன் இப்படி எரைக்க எரைக்க ஓடிவந்தே?" என்று பக்ஷமாகக்கேட்டான்.

வாசந்தி:—(கண்ணில் நீர் ததும்ப அவ் வேலைக்காரனின் கைகளைப் பிடித்துக்கொண்டு) முத்தய்யா! பள்ளிக்கூடம் லீவுன்றது எனக்குத் தெரியும். அதுக்காக வல்லே. எங்கப்பா திடீர்னு கீழே விழுந்து தலெலெ அடிபட்டு ஞாபகமில்லாமே கடக்கிரு. நீ ஒரு ஒபகாரம் பண்ணனும். அதுக்குத்தான் இங்கே வந்தேன். இந்த டெலிபோனில் டாக்டர் ராமநாதனைக் கூப்பிட்டுட்டு என் கையிலே ரீஸீவரே குடுத்துடு. நான் பேசிக்கிறேன். இதுதான் நீ செய்யவேணும்.

முத்தய்யா:—அடாடா! அவர் பெரிய டாக்டராச்சே. அவர் வந்தா சரியானபடி பணங்கொடுக்க உங்களாலே முடியுமோ! வீட்டுக்கு வந்தாலே பத்துருபா குடுக்கணுமே...தரும ஆஸ்பத்திரிக்குப் போகக்கூடாதோ?

வாஸந்தி:—(சற்று யோசித்த பின்) தரும ஆஸ்பத்திரி இருக்கட்டும். முத்தய்யா! எங்கம்மாகிட்ட பணம் இருக்கு. அவர் வந்தாதான் நன்னு பாப்பார். சீக்கிரம் குணமாயிடும். நீ கூப்பிடு, முத்தய்யா! எனக்கு நம்பர் தெரியாது—என்ருள்.

முத்தய்யன் இயற்கையிலே நல்ல உபகார குணமுடைய வன். அதோடு, மூர்த்தி ஒரு சமயம் இந்த முத்தய்யனுக்கு இனமாக ரெண்டு சொக்காய் தைத்துக் கொடுத்த நன்றி விசுவாசம் உள்ளவன் ஆகையால், உடனே இசைந்து டெலிபோனின் நம்பர் பார்த்து, டாக்டரை அழைத்துவிட்டு, வாஸந்தியிடம் ரிஸீவரைக் கொடுத்தான்.

இந்தச் சிறுமி பரபரப்புடன் ரிஸீவரை வைத்துக் கொண்டு, ''ஹல்லோ டாக்டர்! குட்மார்னிங், சார்! எங்க அப்பாவுக்கு அடிபட்டு மயக்கமா விழுந்துட்டா; இன்னும் தெளியலே. நீங்க அப்பாசாமி தெரு, 66-நெம்பர் வீட்டுக்கு உடனே வரணும்; அவசரம்...ஆமாம் டாக்டர்! ரத்தம் நிக்கவேயில்லே...சீக்கிரம் வாங்கோ...குட் மார்னிங்'' என்று கூறி, ரிஸீவரைக் கீழே வைத்துவிட்டு, ''முத்தய்யா! ஒனக்கு ரொம்ப வந்தனம். நான் போய்வரேன்'' என்று சொல்விட்டு அங்கிருந்து ஓட்டம் பிடித்தாள்.

---

## 15

ஆவலே உருவமாக ஓடிவந்து, ''அம்மா! அம்மா! பெரிய டாக்டர் ராமநாதனையே வரச்சொல்விட்டு வந்திருக்கிறேன். இப்பவே வந்திடுவா. இன்னமா அப்பா கண்ணை தறக்கல்லே? பேசினாரா? மயக்கம் தெளிந்ததா!... அப்பா! கண்ணை தறந்து பாரேம்பா! ராஜு அழுரான் பாருப்பா; அப்பா!'' என்று கூப்பிடும்போது மோட்டார் ஹாரன் வீதியில் கேட்டதைக் கவனித்ததும், ''அம்மா அம்மா! அதோ டாக்டர் வந்துட்டார். நான் போய் கூட்டிண்டுவரேன்'' என்று எழுந்து பரபரப்புடன் ஓடினாள்.

அதற்குள் அந்த அறையின் வாசற்படி யருகில், டாக்டர் கையில் ஒரு சிறு தோல் பெட்டியுடன் வருவதைப் பார்த்த வாஸந்தி, ஆச்சரியத்துடன், ''டாக்டர்! குட்மார்னிங்! இதான் எங்க அறை; உள்ளே வாங்கோ! இன்னும் எங்கப்பா கண்ணே தெறக்கலே டாக்டர்!'' என்று குழந்தைகளின் சுபாவத்தைப் போலவே களங்கமற்றுக் கூறினாள்.

தன்னைப் பிரமாதமாக டெலிபோனில் அழைத்ததைப் பார்த்தால், ஏதோ பெரிய மனிதர்களின் வீடு என்று எண்ணி மலைத்துக்கொண்டு வந்த டாக்டர், இச்சிறு வீட்டையும், இங்குள்ள ஏழைச் சின்னங்களையும் பார்த்து, தாம் வீடு

தவ்ருக வந்துவிட்டோமோ என்று யோசித்துக்கொண்டு நிற்கையில்தான், வாஸந்தி ஓடிவந்து மேற் சொன்னவாறு அவரிடம் தெரிவித்தாள். டாக்டரின் கையைப் பிடித்து இழுக்கவும் ஆரம்பித்தாள்.

டாக்டர்:—என்ன, நீயா டெலிபோன் பண்ணே?

வாஸந்தி:—ஏன் டாக்டர்! நான்தான் பண்ணேன். எனக்கு டெலிபோனில் பேசத் தெரியுமே!

டாக்டர்:—அடாடா! என்ன தைரியம்! நான் யாரோ பெரிய மனுஷான்னு பார்த்தேன்.

வாஸந்தி:—(முகம் சுருங்கியவாறு பரிதாபமாகப் பார்த்துக் கொண்டே) டாக்டர், ஆபத்துன்னு எல்லாருக்கும் ஒன்னுதானே! டாக்டர்! இதிலே பணக்காரா, ஏழேன்னு வித்தியாசம் உண்டா,டாக்டர்! எங்கப்பாக்கு ஆபத்து வந்தா எங்களுக்கு வேறு திக்கு யாரு,டாக்டர்? ஏழைகள் கூட்டாக்கா பணமில்லாமே டாக்டர்கள் வரமாட்டான்னு எங்கம்மாகூட சொன்னு! தர்ம ஆஸ்பத்திரிககுப் போனுக்கா அங்கேகூட ஏழைகளெ சரியாகவே பாக்கறதில்லேன்னு எங்க வாத்தியாரம்மா முன்னே சொல்லி இருக்கா. அதனுல்தான் டாக்டர், நான் நேரே வந்தா நீங்க வரமாட்டேள்ன்றது தெரிஞ்சுதான் இப்படி டெலிபோன் செய்தேன். டாக்டர்! சீக்கிரம் எங்கப் பாவெ, டாக்டர்!'' என்று கூறும்போது கண்ணில் மடமட வென்று ஜலம் வழிந்துவிட்டது.

இந்தச் சிறுமியின் வார்த்தைகள் டாக்டரின் இதயத்துள் புகுந்து துளைத்தன. வயதில் சிறியவளாயினும் சாமர்த்தியமாக வேலை செய்து, சாதுர்யமாகப் பேசுவதைக் கண்டு வியப்படைந்துவிட்டார். தடதடவென்று உள்ளே வந்து மூர்த்திக்குக் கட்டுக் கட்டி, ஒரு ஊசி குத்தி,மயக்கம் தெளிய மூக்கில் ஏதோ முகரச்செய்து, பின்னரே அச் சிறுமியின் பால் வடியும் முகத்தை நோக்கி ஒரு குறுநகை புரிந்தார். அச் சிறுமியின் முகத்தில் ததும்பும ஆவலும், பிதாவிடமுள்ள வாஞ்சையும் அவரை வியப்புறச் செய்தன.

டாக்டரின் மனமும் கலங்கியது. ஒரு விஸிட்டுக்கு 15 ரூபாய் கக்க வைக்கும் தன்னை இச் சிறுமி இத்தனை புத்திசாலித்தனமாய், தந்திரமாய் வரவழைத்துப் பேசிய வியப்பை அவரால் அடக்கவேமுடியவில்லை. அதைச் சற்று சமாளித்துக் கொண்டு, ''குழந்தெ!......அப்பாவுக்கு ஒன்னும் பயமில்லெ,

சாயங்காலத்துக்குள்ளே சரியாப்போயிடும். கவலைப்படாதே. எனக்குப் பீஸ் குடு; நான் போகணும்'' என்று ஒரு மாதிரி பார்த்தபடியே கேட்டார்.

வாஸந்தியின் முகம் சடக்கென்று மாறியது. அவளால் தடுக்கமுடியாத ஒருவிதமான விசனம் மனத்தில் பொங்கி எழுந்தது. ''டாக்டர்! டாக்டர்! நாங்க ரொம்ப ஏழை. எங்கப்பாவுக்குத் தையல் வேலெதான்; அதுவும் இப்போ வரதே கிடையாது; எங்கப்பாவுக்கு சீக்கிரம் ஒடம்பு குணமாகணமேன்னு நான் ஒங்களெ இப்படிக் கூட்டுட்டேன்; அது ரொம்ப தப்புதான்; அதுக்காக என்னே மன்னிக்கணும்; பெரியவாகிட்ட தப்பு பண்ணிட்டாக்க அது பரிகாரமாறத் துக்கு அவாளெ விழுந்துவிழுந்து சேவித்து, தாடெலெ போட்டுண்டா பாவமில்லேன்னு எங்க வாத்யாரம்மா சொல்லி இருக்கா; என்னால் அதான் இப்போ செய்யமுடியும்...'' என்று கண்ணீர் வழியக் கூறிக்கொண்டே, டாக்டரே எதிர்பாரா வண்ணம் விழுந்து பலதரம் நமஸ்காரம் செய்துவிட்டாள். இதைக் கேட்டும் பார்த்தும் நிற்கும் டாக்டரின் மனம் கலங் கியதோடு, கண்ணில் கண்ணீரும் முட்டிவிட்டது. 'இத்தனை சிறிய பெண்ணின் மனத்திலும் என்ன பரிசுத்தமான தெய்வ பக்தியும் நம்பிக்கையும் சாமர்த்தியமும் அடங்கி இருக் கிறது' என்று ஆச்சர்யக் கடலில் மூழ்கியவராய்ச் சிறுமி யைத் தூக்கி அணைத்துக்கொண்டு...

''குழந்தாய்! நீ மகா கெட்டிக்காரி! உன்னுடைய சமத் காரத்தினால் நான் பரம சந்தோஷப்பட்றேன். நான் விளை யாட்டுக்குக் கேட்டேன். நீ வருந்தாதே. நாளைக்கு என் வீட் டுக்கு அப்பாவை அழைச்சுண்டு வா; கட்டு கட்றேன். அழா தேம்மா! என்னையே ஏமாத்திவிட்ட நீ பலே பேர்வழி! நான் போய்வரேன்...'' என்று கூறிக்கொண்டே தன்னுடைய கைப் பெட்டியை எடுக்கப்போனார்.

வாஸந்தி, ''ஊ ஊம்!...நான்தான் அதைக் கொண்டுவரு வேன்'' என்று பெட்டியைத் தூக்கிக்கொண்டு, டாக்டர் பின்னா லேயே சென்றாள். தன் மகளின் அதியற்புதமான சாகஸத் தைக் கண்டு வேணி வியந்தாள்.

---

மைதிலி எந்தச் சந்தோஷத்திலும் பங்கெடுத்துக் கொள்வதில்லையெனினும், அவளுடைய இப் பிறவி பாழ்பட்டு விட்டதேபோல் அடுத்த பிறவியும் பாழாகாமல் இருக்கும்படி சதா பகவானைப் ப்ரார்த்தனை செய்வது வழக்கம். அன்று கார்த்திகையாகையால், குத்து விளக்குகளையும் வெங்கல அகல்களையும் அழகாகத் துடைத்துக் குங்குமம் இட்டுக் கொண்டிருந்தாள்.

அச்சமயம் அவர்களின் வண்டிக்காரக் கருப்பன் அங்கு ஒரு மாதிரியான முகத்துடன் வந்ததைப் பார்த்த மைதிலி, "ஏண்டா கருப்பா! போன வேகமென்ன? வந்த ஜோரென்ன? ஏன் ஒரு மாதிரியா இருக்கே? என்ன சமாசாரம்? ரெண்டு கிழங்களும் எங்கே போச்சு?" என்று கேட்டாள்.

கருப்பன்:—ஆமாம்! போற எடந்தான் தெரிஞ்சிருக் கிதுங்களே! தென்னல் ராமன், கருப்பு காயெ வெள் ளாயாக் கினுனே அந்தமாதிரி இந்த ரெண்டு தாத்தாக்களும் பதினறு வயசுக் கொமரனுகிப்புடப் போராங்களாம்! அதுக்கு இன் னமோ மருந்து சாப்புலே வந்துகிதுங்களாம். அதுக்காகப் போயி ஒரு ஏயெயின் வயித்திலே அடிச்சாப்புலே தள்ளிப் புட்டாங்க!...

மைதிலி:—என்ன! எந்த ஏழெயெ அடிச்சாங்க, சரியாச் சொல்லு?

கருப்:—அடிக்கலே தாயெ! மாடு மெரண்டு போய் எதிரே வந்த ஆளெ முட்டித் தள்ளி மண்டெயெ ஒடச்சிப்புட்டுது. ரத்தம் வெள்ளமா ஓடுது, பாவம்! கால்லெ கூட கல்ல தப்பெ பட்டிருக்கும்!

மைதி:—ஐயையோ! பாவமே! அவனெ என்ன பண் ணுங்கோ! ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோயிட்டாங்களா!

கருப்:—ஐயோ பாவம்! அவன் கார்த்திக்காவ என்னமோ சாமானுங்கல்லாம் வாங்கியாந்தான். பட்டாசுக்காவ அவன் கொயந்தெங்க ஆசெயா வாசல்லே கின்னுகினு எதிர் பார்த் தது தெரியுமா? நம்ப ஐயா அந்த ஆளெபத்தி கொஞ்சமும் கவனிக்கவே இல்லே'...மடயன், தடியன், எதிரேவந்து முட் டிண்டான்னு திட்டிப்புட்டு, வண்டியிலேயே அவனெபோட்டுக் கினுபோயி ஊட்டே உட்டுட்டு வான்னுரு. எசமான் உத்தரவு போல நான் கொண்டுபோய்விட்டேன். கொயந்தங்களும்

அந்த அம்மாளும் என்ன அழுவுராங்க, தெரியுமா! ஐயோ பாவமுண்ணு இருக்குது!

மைதி:—அட கிரகசாரமே! இப்படியா பண்ணுரு? தன் மாட்டினுலெதானே அந்த மனுஷனுக்கு ஆபத்து வந்துது; வீட்டுலே கொண்டுவுட்டு நேரே தேறுதல் சொல்லி, மன்னிப்புக் கேட்டுண்டு வரக்கூடாதா! அவா மனசு எப்படிக் கஷ்டப்படும்? ஐயோ பாவம்! கருப்பா, குழந்தைகள் ரொம்ப சின்னதுகளா?

கருப்:—பெரிய பொண்ணு அம் மாத்திரம் இருக்குதுங்க. 10 வயசுக்குள்ளாற இருக்கும். சின்ன பையனுக்கு 5, 6 வயசு இருக்கும். அவரு பொஞ்சாதி மவாலச்சிமி போலேக்கிராங்க. அவருகூடதான் ராசாமாதிரிகீராரு. அல்லாரும் அழுவுராங்க!

மைதி:—கிழவர் இப்போ எங்கே இருக்கார்?

கருப்:—ரெண்டுபேரும் எங்கே போனுங்கண்ணு தெரியாது. தெற்குப் பக்கமா போனுங்க.

மைதி—சரி, நீ சுப்ப சின்னவண்டியைக் கட்டு. நானு வது போய்ப் பார்த்து மன்னிப்புக் கேட்டுண்டு வரேன்.

கருப்பனும் உடனே சென்று வண்டியைக்கட்டிவிட்டான். மைதிலி வண்டியில் ஏறிக்கொள்ள, வண்டி கிளம்பியது. 'ஐயோ பாவம்!'...என்ற பச்சாத்தாபமும் காருண்யமும் மைதிலியைப் பலமான தைரியத்துடன் வெளிக் கிளப்பின.

மைதிலி, வேணியின் வீட்டுவாசலில் இறங்கும் போது தான் நாம் முன்பு தெரிவித்ததுபோல, டாக்டர் திரும்பியதும் டாக்டர் கைப்பெட்டியை எடுத்துக்கொண்டு அவர் பின்னேடு வாஸந்தி ஓடிவந்ததும், மைதிலி இறங்கி படி ஏறியதும் உள்ளிருந்து வரும் டாக்டரைப் பார்த்து ஆச்சரியத்துடன், "ஓ டாக்டர்! நீங்கள்தான் வந்தீர்களா? நோயாளி எப்படி இருக்கிறார்? பயம் ஒன்றும் இல்லையே, பிராக்ளை வந்ததா! உங்களை யார் அழைத்து வந்தா?" என்று மைதிலி கேட்டாள்.

டாக்டர்:—(நகைத்துக்கொண்டே) இதோ இந்தப் பெண் இருக்கிறுளே! இவள் பலே கெட்டிக்காரி! ஐந்து நிமிஷத்தில் என்னை எமாத்திவிட்டாள். இவளுடைய புத்திசாலிதனமும் சாமர்த்தியமும் பரிதாபமும் என்னை உருக்கின. பெரிய மனுஷன் வீட்டிலிருந்து கூப்பிடுவதுபோலெ டெலிபோன் செய்துவிட்டா! நோயாளிக்கு அபாயம் ஒன்னுமில்லே. ஆனு நல்ல அடிதான். உங்களுக்குப் பந்துவோ!

மைதி:—பக்துவுமில்லே, ஒன்னுமில்லே! இவாளெ எங்களுக்குத் தெரியக்கூடத் தெரியாது. எங்கவீட்டு மாட்டு வண்டியாலேதான் அவருக்கு இந்த விபத்து வந்தது. அவர் 'என் பாவின்னு கூட' கேக்கலயாம். ஐயோ பாவம், ஏழை களாச்சேன்னு நானே நேரே பாத்துட்டு, ஓங்களெ கூப்பிட எண்ணினேன். கடவுளே உங்களெ கூப்பிட்டார்.

டாக்:—ஓங்க மாடா முட்டியது? என், தாதா எங்கே? மருந்துக்குப் போய்ட்டாரா? நான் எத்தனெ சொன்னலும் கேக்கறதில்லே......சரி, நேரமாகிறது; நான் வரேன்—என்று கூறிப் பின் வாசந்தியைத் தட்டிக்கொடுத்துவிட்டு, "கொழந்தெ, பயப்படாதே! நான் வரென். மாமியெ உள்ளே அழைச்சிண்டு போ"—என்றார்.

வாஸந்தியும் "ரொம்ப வந்தனம், டாக்டர்! நமஸ்காரம்!" என்று கூறிக் கைகுலுக்கினள். காரும் பறந்தது.

வாஸந்தியின் சமத்தும், சுறுசுறுப்பும் மைதிலியைப் பிரமிக்கச் செய்தன. அவளேயே பார்த்துக்கொண்டு நின்றாள். வாஸந்தி, "மாமி உள்ளே வாங்கோ" என்று அழைத்துச் சென்றாள். அதேசமயம் மூர்த்தி கண்ணைத்திறந்து பார்த்தான். வருத்தம் தாங்காது கண்ணீர் மளமளவென்று வந்துவிட்டது. அருகில் உட்கார்ந்திருக்கும் வேணியின் பரிதாபத்தையும், ராஜு பேந்தப்பேந்த விழிக்கும் விழிப்பின் கண்ணராவியையும் கண்டு சகிக்காமல், ராஜுவை வாரியணைத்துக்கொண்டபடியே, "அக்கா எங்கேடா கண்ணா?" என்றான்.

அதே சமயம் வாசந்தி சந்தோஷத்துடன், "அம்மா! அப்பா கண்ணை முழிச்சாரா! அப்பாவெ முட்டியது இவாத்து மாடுதானும்மா! இந்த மாமி வந்திருக்கா, பாரு!"...என்று கூறிக்கொண்டே வரும்போது, மூர்த்தி பேசிய குரலைக்கேட்டு ஆவலே வடிவாய் ஓடி அவனை அணைத்துக்கொண்டு, "அப்பா! அப்பா! மயக்கம் தெளிஞ்சுபோச்சா! எங்களுக்கெல்லாம் பயம்மாப்போயிடுத்துப்பா! தலெ வலிக்கிறதாப்பா?' என்று கொஞ்சிக்கொஞ்சிக் கேட்டவாறு தலையையும், முகத்தையும் தடவிக்கொடுத்தாள். மூர்த்தியும் வாய் திறந்து பேச முடியவில்லை. மௌனமானன். வேணி, மைதிலியை நோக்கி, அம்மா! வாங்கோ; ஒக்காருங்கோ!" என்றாள்.

மைதிலி:—அம்மணி! இந்த மாதிரி ஒரு விபத்து எங்கள் முரட்டு மாட்டினல் ஏற்பட்டதற்கு, நான் ரொம்ப வருத்தப் பட்றேன். அடிபட்டுவிட்டதுக்காக ஒரு மன்னிப்புக்கூடச்

சொல்லாமல் அவர் வந்தூட்டதாக எங்க வண்டிக்காரன் சொன்னான். அதனாலே நான் வந்தேன். நீங்க ரொம்ப மன்னிக்கணும். ஏதோ புதிய மாடானதால் இப்படி நேர்ந்து விட்டது.

வேணி:—அம்மா! மாடு என்ன செய்யும்? வண்டி என்ன செய்யும்? இப்போ இந்தமாதிரி அனுபவிக்க விதி வலிய வந்தது. அதை யாராலாவது தடுக்கமுடியுமா! நீங்கள் இந்த ஏழைமேல் அன்பு வைத்து இந்தக் குடிசைக்கு வந்ததற்காக நாங்கள் எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

மைதிலி:—இதென்னம்மா ஏதோ தடபுடலா பேசறங்கோ! எங்களாலே இந்தமாதிரி விபத்து வந்ததுக்கு நாங்க தானே மன்னிப்புக்கேட்கணும். குழந்தைகளின் பரிதாபத்தெ எங்க வண்டிக்காரன் சொன்னதும் என் மனசுக்கு மிக்க வருத்தமாய்ப்போய்விட்டது. அவர் ஆசையா வாங்கிண்டு வந்த சாமான்கள் பட்டாசுகள் எல்லாம் ரோட்டிலே சிதறிப் போச்சாம், குழந்தைகளுக்குப் பட்டாசுகள் வாங்கிண்டு வருவார்னு எதிர்பார்த்த ஆவல் எல்லாம் அடியோடு ஓடஞ்சுபோயிருக்கும், பாவம்!......அம்மா வாஸந்தீ! இந்தம்மா! நீயும், தம்பியும் பட்டாஸ் வாங்கி சுடுங்கோ' என்று கூறிக்கொண்டே வாஸந்தியின் கையில் இரண்டு ரூபாயைக் கொடுக்கப்போனாள்.

வாஸந்தியும், ராஜுவும் அதை வாங்கிக்கொள்வதா, வேண்டாமா வென்று தயங்கியபடியே, தாயாரின் முகத்தை மாறிமாறிப் பார்த்தார்கள். குழந்தைகளின் குறிப்பறிந்த வேணி, சாமர்த்தியமாக மைதிலியை நோக்கி, "அம்மா! அதெல்லாம் ஒன்னும் வாண்டாம். பரவாயில்லை. ஒங்க அன்பு என்னிக்கும் இருந்தா அதுவே போதும்" என்றாள்.

மைதிலி:—அம்மா! இந்தப் பிரமாதத்துக்குப் பெரிய பெரிய வார்த்தைகள் சொல்வது சரி இல்லெ. கொழந்தைகளின் ஆவல் எவ்வளவு தூரம் இருக்கும்னு எனக்குத் தெரியும். அதனாலெ இதைமட்டும் மறுக்காமெ கொழந்தைகளெ வாங்கிக்கச் சொல்லுங்கோ? "இந்தாடா கண்ணா! வாங்கிக் கோப்பா!" என்று ராஜுவை இழுத்து ஆசையோடு மடியில் உட்கார வைத்துக்கொண்டு, ரூபாயைக் கையில் வைத்து மூடியபடியே, "இதோபாரு, அக்காவும் நீயும் பட்டாசு மத்தாப்பு எல்லாம் வாங்கிக்கிங்கோ" என்று கூறினாள். வேணியின் முகத்தை ராஜு பார்க்கும்போது வேணியும்

பாட்டி! தாத்தாவாயிட்டாங்களே. பாட்டி தாதா! பாட்டி தாதா!" என்று வாஸந்தியும் ராஜுவும் கையைக் கொட்டிக் குதிக்கிறார்கள். வேணி ஆத்திரம் தாங்காமல் பொங்கிவரும் ஆவேசத்துடன், 'ஆஹா! கண் அவிந்த குருடனுக்கும் கொடிய குருடனாகிய காமக்கள்வா? கபட சந்நியாசீ' என்னைக் கற்பழிக்க எண்ணியல்லவா என் புருஷனை ஊருக்கு அனுப்பினை! உன்னையெ மான பங்கம் பண்ணி, உனக்குப் புத்தி போதிக்கவே நான் இப்படி செய்தேன். இனிமே இந்த மாதிரி மானங்கெட்ட கொடிய எண்ணம் எண்ணமாட்டயே! அசல் பெண்களின் கற்பை விழுங்கி ஏப்பம்விடும் காமக் கள்ளனாகமாட்டயே! புத்தி வந்ததா? புத்தி வந்ததா?" என்று பல்லைக் கடித்துக் கொண்டே குடத்தோடு தண்ணீரை எடுத்துக் கிழவனின் தலையிலே தடதடவென்று கொட்டிவிட்டாள்.

மூளையே கலங்கிவிட்டதுபோல் அதுவரையில் தத்தளித்த கிழவரின் ஆத்திரம் உச்சஸ்தாயியைப் பூரணமாக எட்டிவிட்டது. கண்கள் நெருப்புப் பொறி பறந்தவாறு, அங்கிருந்த தடிக் கம்பை எடுத்து ராஜு உள்பட எல்லோரையும் அடித்து நகர்த்திவிட்டு, கொடியிலிருந்த மூர்த்தியின் வேஷ்டியை இழுத்துக் கட்டிக்கொண்டு, குங்குமத்தை அழித்துவிட்டு, ஒரே பாய்ச்சலாக அந்த இடத்தை விட்டு, தலை இடிப்பதுகூடத் தெரியாமல் ஓடி மறைந்தார்.

---

## 31

**பு**த்திர வாத்ஸல்யம் சாமானியமானதா? அன்னையின் இடத்திலுள்ள பக்தியும் அன்புந்தான் கூறத் திறமுள்ளதா? மூர்த்தி தாயாரின் மீதுள்ள அலைமோதும் கரை காணாத அன்பின் வேகத்தால் இழுக்கப்பட்டு அதே நினைவுடன் ஊரையடைந்தான், தள்ளாத கிழவி ஒரு மூலையில் ஓலைப் பாயில் படுத்துக் கிடந்தாள். அவள் பக்கத்தில் ஒரு தடிக் கம்பும் ஒரு தீர்த்த டம்ளரும் இருந்தன. கிழவி படுத்திருக்கும் மாதிரியைப் பார்த்தால், அவளுக்குக் களைப்பு அதிகமாக இருப்பதாயும் சரிவரக் கவனிக்காமல் அலக்ஷியம் செய்து தள்ளி இருப்பதுபோல் தெரிந்தது. மூர்த்தி அணைகடந்த அன்புவெள்ளத்துடன் ஓடிப்போய், "அம்மா! அம்மா!" வென்று அழைத்தவாறு படுத்திருப்பவளைச் சேர்த்துக் கட்டிக்கொண்டான்.

மூர்த்தியின் தாயார் தாங்கமாட்டாத அபாரமான சந்தோஷத்தினுல் உள்ளம் பூரிக்க ஆனந்த பாஷ்பம் பெருகியவாறு, "அப்பா மூர்த்தி! வாடா! என் சாமி! ஒன் ஒடம்பு என்னடா இப்படி எளச்சு போச்சே! வேணி வரல்லயா! பசங்க வரல்லயா! என் கண்மணி ராஜூ நன்னு இருக்கானு!" என்று சந்தோஷப் பெருக்கினுல் கேட்டபடியே எழுந்து உட்கார்ந்து மகனை முதுகில் தடவியும், அணைத்துக் கொண்டும் புத்திரவாத்ஸல்யம் ததும்ப நோக்கினுள்.

மூர்த்தி:—அம்மா! எல்லோரும் சௌக்யமாயிருக்கா. அடுத்த தடவை வரச்சே அழைச்சிண்டு வரேன். நீ எப்படி இருக்கே! ஒடம்பு ஏன் இத்தனெ கேவலமாயிருக்கு? ஒன்னே முன்னே போலவே சரியா கவனிக்கிருளா! ஒன்னே பாத்தா பரிதாபமா இருக்கே! எலும்பும் தோலுமா இருக்கயே அம்மா!

கிழவி:—அப்பா! அதெத்தாண்டா சொல்லணும்னு ஒன் வரவே எதிர்பார்த்துண்டே இருந்தேன். இப்ப ஐந்து, ஆறு மாசமா சரியா பணம் நீ அனுப்பறதில்லேயோன்னே! அதனுலே இந்தக் கட்டெயெ கவனிக்கிறவாளே கடயாதுடாப்பா! பணத்துக்காக ஏதோ கொஞ்சம் ஆசெ காட்டினுளேயொழிய பணம் நின்னுது, அன்பும் வத்திப்போச்சு. ஒரு நாளக்கெல்லாம் நான் பட்டினி கடந்தாலும் கேக்கரதில்லே. பகல் 12 மணிக்கோ 1 மணிக்கோ இஷ்டமான போது அரை வயிறு சாப்பாடுதான் வெக்கரா! ராத்திரியிலே சில நாளக்குத் தண்ணி கூட குடுக்கரதில்லே. கேட்டா "ஒம் பிள்ளே அனுப்பறது தட்டுகெட்டு போச்சோ! எட்டு வேளெ கூட சாதம் போடலாம். ஒன்னெ கொண்டு எங்க கால்லெ கட்டி எழவெடுக்கரா. எத்தனெ நாளக்குத்தான் செய்ய முடியும்? அழைச்சிண்டு போரத்துக்கென்ன?!' என்று எப்பப் பாத்தாலும் சொல்ருடா! (கிழவிக்குத் துக்கம் தாங்காமல் தொண்டையை அடைக்கிறது; கண்ணீர் பெருகுகிறது. மூர்த்திக்கும் விசனம் தாங்கமாட்டாது கண்ணீர் வழிகிறது)

மூர்த்தி:—'அம்மா! போரும்; நிறுத்து. தெரிஞ்சுண்டேம்மா! இனுமே நான் ஒன்னெ இங்கே வெக்கமாட்

டேன். எந்தப் பாடானுலும் பட்டு ஒன்னெ அழச்சிண்டு போயிட்ரேம்மா! நீ வருத்தப்படாதே! பெத்த தாயெ காப்பாத்தரத்தெவிட பெரிய காரியம் எனக்கு வேறு என்ன இருக்கு? அம்மா! நானு ஊருக்குப் போயி தகுந்தாப்பலே எடத்தெ பாத்துவெச்சுட்டு ஒடனே வந்து ஒன்னெ அழெச்சிண்டு போரேன். இவா கண்ணுலே அப்புறம் காட்டவே மாட்டேன். மாத்ரு பரிபாலனத்துக்கும் கைங்கர்யத்துக்கும் நான் குடுத்து வேக்கணுமேம்மா! கண்ணீர் விடாதே! இந்தா! பழத்தெ சாப்பிடு"— என்று கூறிக்கொண்டே கண்ணைத் துடைத்துக் கொண்டு, பழத்தை உரித்து அவள் வாயிலே போட்டான். கிழவி பசியோடு ஆவலாகச் சாப்பிட்டாள்.

அச்சமயம் அவ்வீட்டுக்காரர் அங்கு வந்தார். "என்னடா மூர்த்தி! எப்ப வந்தே? என்னவோ! பணத்தெக் குடுக்காதெ இந்தப் பஞ்ச காலத்திலே இப்படி பண்ணுக்கா என்ன பண்றது? ரொம்ப கஷ்டமா இருக்கு" என்று முடிப்பதற்குள், மூர்த்தி இடை மறுந்து, "மாமா! இன்னும் 5, 6 நாள் பொறுத்துக்கங்கோ! எங்கம்மாவெ அழைச்சிண்டு போயிட்றேன். இனுமே இங்கே விட்டு வைக்கமாட்டேன். இதுவரைக்கும் காப்பாற்றினதற்கும் ரொம்ப வந்தனம்; இந்தாரும் 5 ரூபா' என்று கூறிவிட்டு, அவரிடம் ஒரு ஐந்து ரூபாய் நோட்டைக் கொடுத்தான்.

அவ்வளவுதானே வேண்டும். பணத்தைப் பார்த்ததும் பல்லிளித்துவிட்டது. 'ஏம்மா! காத்தாலே என்ன சாப்பிட்டெ? அடீ அம்மாளு! பாட்டிக்கி காப்பி குடுத்தையா?' என்று உபசரிக்கவாரம்பித்து விட்டார். மூர்த்திக்கு இந்த நாடகத்தின் வேஷம் நன்ருக தெரியுமாதலால், அதை அவன் லக்ஷ்யமே செய்யாமல், தாயாருக்குத் தேறுதல் கூறிவிட்டுத்தான் அப்போதே புறப்படுவதாகச் சொன்ஞன். ஆனல், கிழவி இன்னும் ஒருநாளாவது தன் கூட இருக்கவேணுமென்று ஆசைப்பட்டதால், அப்படியே இருக்க இசைந்தான்.

தாயின் பரிதாபமும், அன்பும் மூர்த்தியின் மனத்தில் நன்ருகப் பதிந்துவிட்டதால், உடனே அவளை அழைத்துச் செல்வதிலேயே நோக்கம் சென்றது. அவள் இஷ்டப்படியே மூர்த்தி ஒருநாள் கூட அங்கே இருந்துவிட்டுப் பின்னர் ஊருக்குக் கிளம்பிஞன்.

வேணி, வாஸந்தி, ராஜு மூவரும் அன்று மூர்த்தியின் வரவை எதிர் பார்த்துக்கொண்டே சந்தோஷமாக இருந்தார்கள். வேணி, மூர்த்தியின் தையல் மெஷினைத் துடைத்துக் கொண்டிருந்தாள். வாஸந்தி, தன் புத்தகங்களை அடுக்கிக் கொண்டிருந்தாள். அச்சமயம் ஒரு ஆள் வந்து, "அம்மா! அம்மா!" என்று கூப்பிட்டான். வேணி எழுந்து வந்து, "யாரப்பா" என்றாள்.

**அம்மனிதன்:**— தர்ஜி திருமூர்த்தி உங்க புருஷனும்மா! ஒங்க பேரு திருவேணியம்மாளாம்மா?

**வேணி:**— ஆமாம்! என்ன சமாசாரம்?

**வந்தவன்:**—அம்மா! திருமூர்த்தி ஊரிலிருந்து வரும் போது வழியிலெ யாரோ திருடர்கள் நன்னு அடிச்சு பல காயப்படுத்திட்டாளாம். அவருக்கு நெனவே இல்லாமெ நடு வழியிலே விழுந்து கிடந்ததெ யாரோ பாத்து ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வந்து விட்டிருக்கா. ஆஸ்பத்திரியிலே விசாரிச்சத்துலே இவர் தர்ஜி திருமூர்த்தின்னு யாரோ சொல்லவே தெரிஞ்சுது. ஒங்களுக்குத் தகவல் சொல்லச் சொன்னுங்க.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் நின்ற இடத்திலேயே வேணி 'ஹா' வென்று சாய்ந்துவிட்டாள். "அப்பாவையாம்மா அடிச்சுப்புட்டா? ஐயையோ! அப்பா! அப்பா!" என்று குழந்தைகள் பெரிதாகக் கத்தவாரம்பித்துவிட்டார்கள். வேணிக்கு ஆகாயமும் பூமியும் ஒன்ருகிவிட்டது. பேசவே முடியாமல் கல்லாய் சமைந்துவிட்டாள்.

வாஸந்தி வந்த மனிதனைநோக்கி, "ஐயோ! நாங்க வந்து எங்கப்பாவெ பாக்கலாமா? எங்கப்பா எப்படி இருக்கா? எங்களெ அழெச்சிண்டு போரயா?" என்ருள். வந்த மனிதன் குழந்தையின் பரிதாபம் தாங்காமல் மனம் உருகினன். "அம்மா! இப்போ யாரும் வரக்கூடாது. தினம் சாயங்காலம் 5 மணிக்கு யார் வேண்ணுலும் வரலாம். நீங்க அப்போ வந்து நாலாவது வார்டு எங்கேன்னு கேளுங்க. அங்கே கொண்டுபோய் விடுவா. பதினலாவது படுக்கையிலே ஒங்கப்பா படுத்திருக்கார். நான் போய் வரேன்"

என்று போய்விட்டான். வாஸந்தி 'அம்மா! அம்மா! என்னம்மா! பேசமாட்டெங்கரெ. "ஐயோ! அம்மா" என்று கதறியவாறு, வேணியின் முகத்தில் ஜலத்தைத் தெளித்தாள். வேணி அப்போதும் கண் விழிக்கவில்லை. ராஜு! அம்மாவெ பார்த்துக்கோடா! இதோ நொடிப்போதிலே மாமியை அழெச்சிண்டு வரேன்" என்று கூறிவிட்டு, ஓட்டமாக ஓடினுள்.

அடுத்த நிமிஷமே மைதிலியுடன் ஓடிவந்தாள். மைதிலி வாஸந்தி மூலம் விஷயமறிந்துகொண்டு, கண்ணீர் வடித்தபடியே வேணியைத் தூக்கித் தன் மடியில் போட்டுக்கொண்டு, மூர்ச்சை தெளியச் செய்து, பின்னர் "அம்மா! கடவுளைப் பிரார்த்தியுங்கோ! அழுதா என்ன பண்றது? கருப்பன் வண்டி கொண்டு வருவான். ஆஸ்பத்திரிக்குப் போய் அவரெ பார்த்துட்டு வாங்கோ!" என்று தேறுதல் கூறினுள்.

யார் தேற்றினுல்தான் வேணியின் மனம் தேறுதலடையும்? பேசவும் முடியாது பதுமைபோலானுள். 4 மணிக்கெல்லாம் கருப்பன் வண்டியுடன் தயாராய் வந்தான். வேணியும் குழந்தைகளும் வண்டியில் ஏறிக்கொண்டார்கள். "கருப்பா! கூடவே போய் பாத்துட்டு ஜாக்கிரதையா அழைச்சிண்டு வந்து வீட்டிலே விட்டு விட்டு வா!" என்று மைதிலி உத்தரவு போட்டுவிட்டு தன் வீட்டிற்குச் சென்ருள். வண்டியும் நகர்ந்தது.

---

## 33

மைதிலிக்கு உண்டான துக்கத்திற்கு அளவே இல்லை.

"இம்மாதிரி படுகாயப்படுத்தி ஒரு குடும்பத்தையே பாழ்படுத்திய சண்டாளர்கள் யாராக இருக்கும்? அன்று அவமானப்படுத்தியதால், அதையே ஒரு க்ஷாத்திரமாக வைத்துக் கொண்டு, கிழவனே ஒருகால் இம்மாதிரி பழிக்குப்பழி வாங்கி இருப்பானு!" என்று அவள் நினைக்கும்போது அவள் தேகமே நெருப்புப் பிடித்து எரிவதுபோல் வேதனையுண்டாகியது. கூறத்திறமற்ற சங்கடம் அவளை வதைக்கின்றது. வேணியின் பரிதாபகரமான முகமும் அவள் கண் முன்பு தோன்றிப் பின்னும் நெஞ்சு பிளந்துவிடுவது போல் சங்கடம் செய்கிறது.

அச்சமயம் கிழவர் மாடி வராந்தாவில் தனக்குத்தானே "ஆமாம்; ஆமாம். இதுதான் சரியான பழிக்குப் பழி. பழிக்குப் பழி வாங்கிவிட்டேன். இனிமேல் பிண்டத்திற்குத் திண்டாடட்டும். என்னைப் பொம்மனாட்டி வேஷம் போட்டு, மானபங்கம் பண்ணின கொழுப்புப் புடிச்ச வேணி கம்ம னாட்டியாகி மூலேலெ ஒக்காண்டு அழட்டும். அதுதான் சரி யான வழி' என்று கூறிய வார்த்தைகள் மைதிலியின் காதில் கூரிய ஈட்டியைப் பழுக்கக் காய்ச்சி செருகுவது போல் இருந்தது.

"ஹா! ஐயோ! நான் நெனச்சதுபோலவே ஆயிடுத்தே. கடவுளே!" என்று தன்னை மீறிப் பொங்கிவரும் ஆத்திரத் துடன் தடதடவென்று மாடிக்குச் சென்று கிழவனின் தோள்களைப் பிடுத்து உலுக்கு உலுக்கு என்று உலுக்கிய படியே, 'ஐயோ! படுமோசம் போய்விட்டதே. உங்களுடைய அக்கிரமச் செய்கைக்கு நற்புத்தி வரப் பண்ணினதை அடியோடு மறந்துபோய் இப்படியா ஒரு உத்தமியின் வயி றெரியப் பண்றது? ஒரு குடும்பத்தைச் சிதற அடிக்கிறது. ஐயையோ! சகிக்கலேயே! நியாயம் அநியாயம் கிடையாதா? மான அவமானமில்லையா? இப்படியா கொலே செய்யறது என்னைக் கொலே செய்தது போதாதென்று இன்னொரு கொலேயும் செய்துவிட்டகளே!

ஆமாம்! நான் இதைக் கண்டிப்பாய்ப் போலீஸாருக் குச் சொல்லிவிட்ரேன். என் வயிறு எரியறது. நெஞ்சு பிளக்கிறது' என்று கண்ணீர் விட்டுக் கதறினாள். கிழவர் முட்டாள்தனமாக வாய்விட்டுக் கூறியதை எண்ணி வருந்தி மைதிலி கூறியதைக் கேட்டு பயந்தார். ஆனால், அதை வெளியில் காட்டிக்கொள்ளாமல், மைதிலியை விரைக்கப் பார்த்தபடியே, "ஓஹோ! சொல்லேண்டி! சொல்லித்தான் பாரேன்! நீ பட்ற பாடு தெரியறது" என்றார்.

மைதிலியின் ஆத்திரம் பொங்கியது. 'ஆமாம். இப்போ பட்ற அவஸ்தையைவிட—இம்சையைவிட—இனுமே என்ன இருக்கு? இதோ! சொல்லியே தீருகிறேன். வந்ததை அனுபவிக்கத் தயார்' என்று ஆவேசத்துடன் அழுத்த மான குரலில் கூறியபடியே, சடக்கென்று தன்னறைக்கு வந்து ஒரு காகிதத்தை எடுத்தாள். அப்போதிருந்த ஆத் திரத்தில் காட்டிக் கொடுத்துவிடவே துணிந்து, 'போலீஸ் இன்ஸ்பெக்டர் சார்!' என்று தலையங்கத்தை எழுதினாள்.

அதே சமயம் வழக்கமாகக் கேட்கும் வானக்குயிலின் நாதம் கம்பீரத் தொனியுடன்,

(முன் தொடர்ச்சி—சரணம்)

அகந்தையே அழிக்கும் ஆத்திரம் பழிக்கும்
இகழ்ந்திடும் செய்கையை எரித்து நல்சாந்தியை
அகத்தில் கொள்வாய் மனமே!

என்று ஒலித்தது. வழக்கம்போல் அது அவள் மனத்தை உருக்கியது. நீர் வழிந்த கண்களுடன், அச்சங்கீத ஒலி கேட்கும்வரையில் பதுமையானுள். உடனே அவள் மனத்தில் ஓர் வேதனையும் துக்கமும் ஏற்பட்டு நெஞ்சைப் பிளந்தது. அவ்வறையில் மாட்டப்பட்டிருந்த நளாயினி, தமயந்தி, சந்திரமதி, ஸாவித்ரி, லக்ஷ்மி, ஸரஸ்வதி முதலிய படங்கள் அவள் கண்ணில் பட்டன. மனம் இடிந்துபோய், பேனு நழுவி நிலே புரண்டது. "பாரத நாரீமணிகள், ஹிந்து தர்மத்தின் தத்துவத்தை நிலே காட்டிய வீரமாமணிகள், பதிவிருதா சிரோமணிகள்! உங்கள் இனத்தில் பிறந்தும் உங்கள் வழியைப் பின்பற்ருது ஆத்திரப்பட்டுச் செய்ய எண்ணிய காரியத்தில், உயர்ந்த ஹிந்து தர்மத்திற்கே களங்கத்தைத்தேடும் மகா பாவியாவேன். கட்டிய கணவன் பெரிய வியாதிக்காரனுஞலும் நளாயினி சகிக்கவில்லேயா? தன்னே அடிமையாக விற்ருலும் சந்திரமதி பொறுக்கவில்லேயா? தன் கணவனுக்காக எமனுடன் வாதாடி பதிவிருதா தர்மத்தை ஸாவித்திரி நிலேநாட்டவில்லேயா? கட்டிய கணவனே காட்டிக் கொடுத்த மகா பாவி' என்று என்னே உலகம் தூற்றுமாயின் பாரத நாரீமணிகளுக்கும், ஹிந்து தருமத்திற்கும் களங்கம் வருமல்லவா? 'ஹா!' என்ன ஜென்மம் எடுத்தேன்?" என்று தனக்குள் பேசிக்கொண்டு அந்தக் காகிதத்தைக் கிழித்தெறிந்துவிட்டுச் சோபாவில் சாய்ந்தாள்.

கருப்பன் வந்தான். அவனேக் கண்ட மைதிலி "கருப்பா! எப்படி இருக்காரு; நீ பாத்தியா? அம்மா, குழந்தைங்க எல்லோரும் என்ன பண்ருே? நெனவு தெரியறதா! டாக்டர் என்ன சொன்ஞராம்?" என்று கேட்டாள்.

கருப்பனின் கண்ணில் கண்ணீர் வழிகிறது. வாய் பேச முடியவில்லே. திணறியவாறு, "அம்மா! என்னுத்தை சொல்லுவேங்க; வவுறு பத்தி எரியுதுங்க; சோத்துக்

கையிலே எல்லா வெரலையும் எந்தப் பாவிகளோ நல்லா கல்லாலே நசுக்கி, பஞ்சாக்கிப்புட்டாங்களாம். அதுக்காவ மணிக்கட்டு வரைக்கும் வெட்டிப்புட்டாங்களாம். மழக்கம்னு சொல்ல முடியாது. அம்மா உசிரே பூடும்போலேக்கீது. கொயந்தங்க கதறுதுங்க. அவருக்குத் தையல் தொழிலுக்கு, அந்த கைதானே முக்கியம். அது பூட்டுதுங்களாம்மே!" என்று கருப்பன் கூறும்போது மைதிலிக்குச் சகிக்க முடியாத துக்கமும் கிழவர்மீது ஆத்திரமும் பொங்கி விட்டன. பதில் பேசமாட்டாது குப்புறப்படுத்து தேகங் குலுங்கப் புலம்புகிருள்.

அவளது பரிதாபத்தைக் கருப்பனுல் கண்டு சகிக்க முடியவில்லை. "அம்மா! அவங்களுக்கு இன்னிக்குச் சோறு கூட பிடிக்காதும்மா! நீங்கதான் போயி ரவெ பலவந்தமா சாப்பிடச் சொல்லணும்மா! அந்தம்மா ரொம்ப இடிஞ்சி பூட்டாங்கம்மா! வண்டி தயாராக்கீது. ரவெ வாங்கம்மா!" என்று வெகு நயமாகக் கூப்பிட்டான்.

மைதிலி கண்ணைத் துடைத்துக்கொண்டு எழுந்து உள்ளே போய் டிப்பன் செட்டுகளில் சாப்பாட்டை எடுத்துக்கொண்டு புறப்பட்டாள். இதைக் கிழவர் மெத்தையிலிருந்து கண்கள் தீப்பொறி பறக்கப் பார்த்தபடியே, 'கரப்பா! கரப்பா!' என்று கூவினர். ஆனல், அவர்கள் காதில் கேட்கவில்லை.

---

## 34

**ம**த்தியில் சில மாதங்கள் உருண்டோடி விட்டன. மைதிலி அடிக்கடி வேணியின் வீட்டிற்குச் சென்று அவளுக்கு ஒத்தாசை செய்யும் செய்கை கிழவருக்குப் பிடிக்காததாலும் மைதிலி எங்கே ஒருவேளை தன்னைக் காட்டிக் கொடுத்து விடுவாளோவென்ற பயத்திலும் ஏதோ ஒரு சாக்கை வைத்துக்கொண்டு மைதிலியையும், மீனட்சியையும் அழைத்துக்கொண்டு, கிராமத்திற்குப் போய்விட்டார். தான் மட்டும் ஊருக்கு அவ்வப்போது வந்து போய்க் கொண்டிருந்தார்.

மைதிலிக்கு மனம் முறிந்துபோய் ஒருவிதமான சலிப்பும் வேதனையும் உண்டாகிவிட்டதால், 'நான் உயிருடன் இருந்தால் என்ன; இறந்தால் என்ன! எங்கு இருந்தால்

தான் என்ன? எமன் கோவிலில் கொண்டு வைத்தாலும் இருப்பதற்குப் பயம் என்ன? இங்கிருப்பதில் கிழவரின் சந்தேகம் அதிகரித்து இன்னும் ஆத்திரமும் அவமானமும் தானே வருகிறது. கண் மறைய எங்காவது சாவதே நலம்' என்று எண்ணிக் கிராமத்திலிருந்தாள். ஆனால், அவ்வப் போது வேணியையும் வாஸந்தியையும் அவளால் மறக்கவே முடியாமல் தவிப்பாள். 'தொழிலும் போய்விட்டதே, இனி எப்படிப் பிழைக்கிறார்களோ! என்ன கதியை அடைந் திருக்கிறார்களோ!' என்று விசனிப்பாள். 'நாம் மெய்ம் மறந்து அனுபவிக்கும் சங்கீதம்—வானக் குயிலின் இனிய கானம்—கேட்காமலிருக்கிறோமே' என்று மட்டும் வருந்து வாள். இவ்விதம் சில மாதங்களாகி விட்டன.

கிழவரின் புத்தியில் இந்தச் சிறைவாஸம் போதும் என்று தோன்றியதோ என்னவோ, மீண்டும் ஊருக்கு அழைத்துக்கொண்டு வந்துவிட்டார். வந்த உடனே வேணி யின் வீட்டிற்குச் சென்று விசாரிக்கையில் வேணி அவ் வீட்டிலில்லை. வேறு எங்கேயோ மாற்றிக்கொண்டு போய் விட்டதாகத் தகவல் கிடைத்தது கேட்டு, மைதிலி மிகவும் வருத்தத்துடன் தன் வீட்டிற்குத் திரும்பி வந்துவிட்டாள்.

இதைக் கிழவர் பார்த்துக்கொண்டிருந்து, 'ஆரம்பிச் சுட்டாயா? ஒன் கொழுப்பை அடக்கறதுக்குத்தானே ஒன்னே நாட்டுப்புறத்திலே கொண்டுபோய் போட்டேன். இன்னும் திமிர் விடல்லெயே? அந்த வேணிக்கு பொழப்பே இல்லாததாலே தாசியாய் பூட்டாளாம். ஊரே சிரிக்கிற தாம். தெரியுமா? இனுமே இப்படி போனயோ, கொலே பண்ணிப்புடுவேன்" என்று கண்டித்தார். நொந்துபோய் விட்ட மைதிலி வாயைத் திறக்கவே இல்லை. வேணியைத் துச்சமாகச் சொல்லிய வார்த்தை தாங்காமல் உள்ளே போய்விட்டாள்.

---

## 35

மூர்த்தியின் தற்போதைய நிலைமையைப் பார்த்த எவர் மனம்தான் உருகாது? கண்ணீர் பெருகாது? அவன் யார் செய்த புண்ணியவசத்தினலோ உயிருக்கு ஆபத்தின் றிப் பிழைத்து வீடுவந்து சேர்ந்தானேயன்றி, அவனுடைய பிழைப்புக்கு ஆதாரமான தையல் வேலை செய்வதற்கு

முடியாமல் கை போய்விட்ட விசனத்தை அவனால் சகிக்கவே முடியவில்லை. "இத்தகைய ஊனத்தை யடைந்த பிறகு நான் பிழைத்ததைவிட என் உயிர் நீங்கி இருக்குமாயின், எவ்வளவு சந்தோஷப்பட்டிருப்பேன்? இப்போது நான் பிழைத்தும் பலனில்லாது போய்விட்டதே! ஆ! ஈசா! என்ன செய்வேன்?' என்று தனக்குள் சதா எண்ணி எண்ணி உருகுவான்.

தன் கையையும், தையல் மெஷினையும் மாறி மாறிப் பார்த்து பெருமூச்சு விடுவான். கண்ணீர் தாரை தாரையாகப் பெருகி ஓடும். சதா புலம்பிப் புலம்பி பின்னும் மெலிந்துவிட்டான். இவனுடைய சங்கடத்தைக் கண்டு சகிக்கமாட்டாத வேணியும் தவித்து உருகுவாள். குழந்தை வாஸந்தியோ தன் பிதாவின் வருத்தத்தை முற்றுமறிந்து, 'இனிமேல் என்ன செய்வது? பிதாவின் தொழில் போய்விட்டதே! எப்படிப் பிழைக்க வழி செய்வார்?' என்று விசனப்படுவாள்.

தன் வாழ்க்கையின் நாதமாகிய தையல் மெஷினைத் துடைத்துக்கொண்டே கண்ணீர் பெருகியவாறு மூர்த்தி, "ஹா! கடவுளே! இப்படியா என் கதியை முடித்தாய்? இந்த மெஷினின் இனிய ரீங்காரம்போன்ற சப்தமே என் வாழ்க்கையின் நாதமாக எண்ணி உள்ளம் பூரித்திருந்தேனே! அப்படிப்பட்ட மெஷினுக்கு இனிமே நான் லாயக்கில்லாதபடி செய்துட்டயே! இது ஒனக்கு தருமமா? இந்த மெஷினே எனக்குப் பெரும் புதையல்னு நெனச்சிண்டிருந்தேனே! என் எண்ணம் ஈடேறாது செய்துட்டயே! இந்த ஆனந்தமான சப்தத்தை நான் இனுமே எப்போ கேட்பேன்?" என்று மனம் வருந்திக்கொண்டிருக்கையில், வாஸந்தி வந்து பக்கத்தில் நின்றாள்.

தந்தையின் கஷ்டம் சகிக்க முடியவில்லை. சிறுமியாயினும் அவள் கண்ணிலும் ஜலம் மளமளவென்று வந்துவிட்டது. 'அப்பா! அப்பா! ஏம்பா அழறே! சாமி ஒன் கையெ வெட்டிட்டாரேன்னு அழறே! சாமிக்குக் கொஞ்சங்கூட புத்தியே இல்லேப்பா! சாமிக்கு நம்ப மேலே ஆசெயெ இல்லேப்பா! ஆசெ இருந்தா இப்படி செய்வாரா! இல்லாட்டா ஒன்னே அடிச்ச திருடனையாவது

புடிச்சி தரமாட்டாரா! நாம்ப இனுமே எப்படிப்பா பொழக்கிறது?" என்று அழுதாள்.

வேணி:—ஒங்களே போலீஸார் கேட்டபோது விரோதி களே இல்லேன்னு சொல்லிப்புட்டங்களே! ஏன் அப்படிச் சொன்னங்கோ! ஒங்களுக்குப் போட்டியா தையல் கடை களெ வெச்சு ஒங்க தொழிலே கெடுத்தவாளே ஏன் சொல் லக்கூடாது? அதோடு அந்த கட்டெடலெ போற கிழவன் அன்னிக்கி நடந்த ஆத்திரத்துலே, அவன்தான் செய்திருப் பான்னு ஏன் சொல்லக்கூடாது?

மூர்த்தி:—வேணீ! நீ புத்திசாலியாயிருந்தும் இப்படி புத்தி இல்லாமெ பேசறயே! நம்மாலேதான் காரியமெல் லாம் ஆறதுன்னு நெனைக்கிறயா! அநியாயமா அவா இருக் கும், இவா இருக்கும்னு சந்தேகத்தாலே ஒத்தர்மேலே பழி போட்றது நியாயமா? அதனுலே நமக்கு இன்னும் பாவமே யொழிய லாபமில்லே. எல்லாருக்கும் சரியான கூலியைக் கடவுள் குடுப்பான். நீ வீணு அவசரம்பட்டுப் பேசாதே! நான் செய்த பாபம் இப்படி அனுபவிக்கணும்னு இருந் தது. அனுபவிக்கிறேன்.

வாஸந்தி:—ஆமாம்பா! பாவம், பாவம்னு சொல்லிண் டிருந்தா ஒன்னெ அடிச்சப் படுபாவி ஆப்டுடுவானேப்பா! போலீஸாரிடம் நீ சொன்னுதானேப்பா தேடிப் புடிப்பா! ஏம்பா! ஒனக்கு இனுமே ஊசி கோர்க்கமுடியாது. தைக்க வும் முடியாது. பின்னே எப்படிப்பா சாப்பட்றது?

மூர்த்தி:—கண்ணு வாஸந்தீ! இத்தனை கோலங்காட்டின ஈசன் அதுக்கும் வழி செய்யாதெயா இருப்பான்? அவன் என்ன வழியிலே பொழப்பு கொடுக்கிறுனே அப்படி சாப் பட்றது.

வேணி:—ஏற்கெனவே மூணு நாலு மாசமா வீட்டு வாடகெ நின்னு போச்சுன்னு வீட்டுக்கார்ரா தொண தொணன்னு கேக்கரா! ஆ ஊன்னு, தையல் மெஷினைக் குடுத்துடு. எடுத்து வித்துப்புட்ரேன்னு பேசரா!

மூர்த்தி:—'ஹா! ஐயோ! முடியாது! முடியாது! அரிச்சந் திரனைப்போலே என்னையே அடிமையாக்கியாவது பணம் கொடுப்பேனேயொழிய, என் உயிருக்கும் உயர்வான மெஷினை நான் குடுக்கவே மாட்டேன். மெஷினைக் குடுத்

துட்டா என்னுயிர் போயிடும். வேணீ! வேணீ! கிழவி கால்லே விழுந்து பொறுத்துக்கும்படி வேண்டிக்கோ! நான் பிச்செ எடுத்தாவது பணத்தெ குடுத்துட்ரேன்” என்று கூறும்போது, அவ்வறை முற்றிலும், ‘மூர்த்தி பிச்சைக்காரன்! பிச்சைக்காரன்!’ என்று சப்தம் ஒலிப்பது போன்றும், அவனுடைய உருவம் பிச்சை எடுப்பது போன்று அவ்வறை முற்றிலும் தெரிவதுபோலும் தோன்றிய தோற்றத்தைக் கண்டதும், ‘ஹா!’ வென்று மூர்த்தி அலறிவிட்டான். அவனுடைய நிலைமைக் கலங்கிவிட்டது. மெஷின்மீது அப்படியே குப்புறச் சாய்ந்தான்.

வாஸந்தி:—அப்பா! அப்பா! அழாதேப்பா! நீ அழுதாக்கா எனக்கும் அழுகெ வரதுப்பா. நீ அழாதே. இதோ பாரு! என்னெ பார்த்து சிரிப்பா. இதோ பாரேன். எனக்கு ஒரு யோசனை வந்திருக்கப்பா—என்று அழுதுகொண்டே சிரித்தவாறு தந்தையின் தலையைத் தூக்கினாள்.

மூர்த்தியும், குழந்தையின் அன்பையும் விசனத்தையும் எண்ணிக் கலங்கியபடியே கண்ணீர் வழிய சோகமும், துக்கமும், வெறுப்பும், அன்பும், வாஞ்சையும் கலந்த ஒரு சிரிப்பு ‘கலகல’ வென்று சிரித்தவாறு, வாஸந்தியை இழுத்துக் கட்டிக்கொண்டான். வாஸந்தியும் குலுங்கக் குலுங்க அழுதபடியே சிரித்துக்கொண்டு, “அப்பா! அப்பா! நேத்திக்கி எதிர்த்த வீட்டுலே ஏதோ விசேஷம்னு அம்மாக்கும் எனக்கும் புது முறத்திலெ வெற்றிலெ பாக்கு, ஒரு படி கடலெ, ஒரு ரவிக்கை எல்லாம் குடுத்தாப்பா! அந்தக் கடலெயே அப்படியே சுண்டல் பண்ணித் தரச்சொல்லி, நம்ப ரெண்டு பேரும் சாயங்காலம் பீச்சுலெ கொண்டு போய் வித்துடலாம். அதுலே காசு வரும். நாம் கஞ்சியாவது குடிக்கலாம். என்னப்பா! என்ன சொல்றே?” என்று கொஞ்சிக் கொஞ்சி கேட்டாள்.

இது கேட்ட மூர்த்தியின் இருண்டு கிடந்த இதயத்தில் பளிச்சென்ற ஓர் ஜோதி உதயமானதுபோல் தோன்றியது. வாஸந்தியை ஆனந்தமும் ஆச்சரியமும் அன்பும் பொங்கிய உணர்ச்சியோடு சேர்த்துக் கட்டியணைத்து முத்தமிட்டான். அபாரமாகப் பொங்கும் ஆனந்தத்தில் வாய் திறந்து பேசமாட்டாது சிலைபோலானான். அவன் அந்த

யோசனைக்கு இசைந்து விட்டதை அவனது உணர்ச்சி நிறைந்த முகமே எடுத்துக் காட்டியதால், வேணி சந்தோஷத்துடன் அடுப்பில் காயும் ஜலத்தில் கடலையைப் போட்டாள்.

---

## 36

கடற்கரையில் மாலை நேரத்தின் ஆனந்தத்தை அனுபவித்துக்கொண்டே ஆயிரக்கணக்கான கூட்டங்கள் தம் தம் இஷ்ட சகாக்களுடனும், காதலிகளுடனும், குழந்தைகளுடனும் பேசிக் கொண்டிருக்கிறார்கள். அச்சமயம் வாஸந்தி வழக்கம்போல் சுண்டல் பாட்டுப் பாடிக் கொண்டே வருகிறாள். மூர்த்தி, கூடையை எடுத்துக் கொண்டு கூட வருகிறான். ஜனங்கள் வாஸந்தியின் பாட்டைக் கேட்பதற்காகவே அவளைப் பாடச் செய்து பின்னர் சுண்டல் வாங்குவது வழக்கம். அன்றும் அப்படியே பலர் அவளிடம் சுண்டல் வாங்கிக்கொண்டார்கள்.

வாஸந்தி, தன் கையில் சேர்ந்த சில்லறையை எண்ணிப் பார்த்தாள். நான்கு அணுதான் இருந்தது. தந்தையின் கையிலிருக்கும் சுண்டலை அவன் கையை இழுத்துப் பார்த்தாள். இன்னும் பாதி சுண்டல் அப்படியே இருந்தது கண்டு, "ஏம்பா இன்னிக்கி சீக்கிரம் வெலையாகலெயே பாதிக்கு மேலே அப்படியே இருக்கே. வீட்டுக்கார கெழவிக்கு இன்னிக்கு எப்படியானலும் ரெண்டு ரூபாய் குடுக்கரேன்னு அம்மா சொல்லி இருக்காளே; கையிலே ஒன்னே முக்கால் ரூபாதானேப்பா இருக்கு. இன்னும் அரைரூபா வந்தாதானேப்பா ரெண்டு ரூபா கெழவிக்கு குடுக்கலாம், கால் ரூபாய்க்கு நாம்ப அரிசி வாங்கிச் சாப்பிடலாம்" என்றாள்.

**மூர்த்தி:**—அம்மா! அதோ கூட்டமா சின்னப் பசங்கள் இருக்கே அங்கே போனக்கா நெரய வாங்குவா! வா போகலாம்—என்றான். வாஸந்தியும் அங்கே ஓடினாள். அப்போது வழியில் அடையாளமே தெரியாமல் மெலிந்துபோய் துரும்பிலும் துரும்பாய்ப் போய்விட்ட மைதிலி, மீனுவின் உபத்திரவத்திற்காக அன்று மெல்ல கடற்கரைக்கு வந்து மணலில் உட்கார்ந்திருந்தாள்.

வாஸந்தி ஓடுவதைப் பார்த்துத் திடுக்கிட்டவளாய் எழுந்து ஆவேசத்துடன் ஓடிப்போய், ஹா! வாஸந்தீ! என் கண்ணே! இதென்ன இது? நீயா சுண்டல் விற்கறே? ஐயோ! வயிறு எரிகிறதே, வாஸந்தி! அம்மா, ராஜு எல்லோரும் சௌக்கியமா? கண்ணே! ஒன்னெ பாத்து எத்தனேயோ நாளாச்சே!" என்று கூறியபடியே மைதிலி மூர்த்தியின் கையின் மூளியைக் கவனித்தாள்.

அவள் வயிற்றிலும் மார்பிலும் செய்யும்சங்கடம் கூறத் திறமில்லை. 'தன் கணவன் செய்த சதியல்லவா இது' என்று நினைக்கும்போது, அவளுடைய வேதனை சகிக்கமுடியாது பயங்கரமாகத் தோன்றியது. வாஸந்தியும், மைதிலியைக் கண்டதும் சுண்டல்விற்கும் எண்ணமும் மறந்துபோய் ஆவலே வடிவமாய், 'மாமீ! மாமீ!' என்று சேர்த்துக்கட்டிக் கொண்டாள். "ஏம்மாமீ! இப்படி எளச்சி போயிட்டங்கோ? அம்மா கூட ஒங்களேபோலத்தான் ஆயிட்டா! சதா ஒங்க வார்த்தேதான். அங்கே வந்தா தாதா அடிக்கப் போருரேன்னு பயந்துண்டு வரதெயில்லே மாமீ!

எங்கப்பாக்கு கை போயிடுத்தோன்னே! அதனுலே இப்படி தினம் சுண்டல் வித்து நாங்க பொழைக்கிறோம். சரி, நான் போறேன்! பாதி சுண்டலுக்குமேலே அப்படியே இருக்கு மாமீ" என்ருள். மைதிலி மிகுந்த பொறுமையுடன், 'வாஸந்தி! எங்கே சுண்டலே காட்டு பார்ப்போம் என்ருள். வாஸந்தி மூர்த்தியின் கையிலிருந்த சுண்டல் கூடையை வாங்கிக் காட்டினுள்.

மைதிலி கூடையுடன் அப்படியே வாங்கி நிர்த்தாக்ஷிண்யமாகவும் யாரும் எதிர்பார்க்காவண்ணமும், அங்கு போகும் மீன் பிடிக்கும் ஒரு செம்படவனைக் கூப்பிட்டு, அவன் கையில் கூடையுடன் சுண்டலைக் கொடுத்துவிட்டுத் தன் கையிலிருந்த மணிபர்ஸை அப்படியே வாஸந்தியின் கையில் கொடுத்து, "கண்ணு! இதைத் தடுத்தால் எனக்குக் கெட்ட கோபம் வரும், அப்புறம் ஒன்னோடெ பேசவே மாட்டேன். இதை அப்படியே அம்மாவிடம் கொண்டுபோய் கொடு! முழிக்காதே; ஊம், பேசாதே போய்விடு!" என்ருள்.

அதே சமயம் மோட்டாருக்கு ரெட் லைட் வைத்தது போல் கண்கள் சிவக்க, கிழவன் இதைப் பார்த்துக்

கொண்டே எதிரில் வருவதைக் கவனித்துவிட்ட வாஸந்தி, "ஐயோ! மாமீ! தாதா வந்துவிட்டார். அப்பா! அப்பா! நீ வந்து விடு; போயிடலாம்" என்று தகப்பனாரின் கையைப் பிடித்துக் கொண்டு, பர்ஸுடன் ஓட்டமாக ஓடிப்போய் விட்டாள்.

---

## 37

இடையில் ஒரு மாதம் ஓடி மறைந்தது. ஒவ்வொரு நாளும் மாயக் கொள்ளையின் பேச்சே அந்த ஊர் முற்றும் பரவி விட்டது. வாஸனை திரவியம் விற்பதுமட்டுமல்ல. எண்ணெய், நெய், புஷ்பம் முதலிய மூகர்ந்து பார்க்கக் கூடிய ஒவ்வொரு வஸ்துவிலும் மயக்கம் கலந்து கொள்ளை யடிக்கிறார்கள் என்ற கம்பளேண்டுகள் போலீஸுக்கு வந்து குவிந்துகொண்டே இருக்கின்றன.

தினம் வீதியில் செல்லும் ஒவ்வொரு வியாபாரியையும் போலீஸார் சோதிக்க வாரம்பித்தார்கள். ஒன்றிலும் தக வல் கண்டுபிடிக்க முடியாத பெருங் குழப்பமும் கலவரமும் உண்டாகிவிட்டது. சில இடங்களில் இரண்டொருவர் இறந்துவிட்டதாகவும் அவ்வப்போது செய்தி கிடைப்ப தால், போலீஸ் டிபார்ட்மெண்டிலேயே அதிகமான பர பரப்பையும், ஊக்கத்தையும் அளித்ததால், ரிஸர்வ் போலீஸை நிறைய வரவழைத்து ஆங்காங்கே ரகசியப் போலீஸும், உடுப்புப் போலீஸும் பாராப் போட்டுவிட் டார்கள்.

இன்று ஏகாம்பரத்தின் முகத்தைப் பார்க்கவே முடிய வில்லை. அவருடைய உள்ளத்தில் தாங்கமுடியாத விசனம் பொங்கி வழிகிறது. பெருமூச்சுடன் தனது ஆசனத்தில் உட்கார்ந்தபடியே, "ஹா! என்ன கஷ்டம். என்ன பரி தாபம்! குழந்தை வாஸந்தியின் துடிப்பைச் சகிக்க முடிய லேயே! மூர்த்தியின் கதறல் என் உள்ளத்தைப் பிளக் கிறது. கோரக்காட்சி! கண்ணுவிக் காட்சி! உம் சவத்தைச் சின்ன பின்னமாக்காமல் கொடுக்க உதவி செய்யாதெ போன நான் பொதுஜன ஊழியன்றதுக்கு என்ன பலன்?" என்று வாய்விட்டுச் சொன்னார்.

எதிரில் நிற்கும் சப்-இன்ஸ்பெக்டர், "ஆமாம் சார்! ரொம்ப பரிதாபமாயிருக்கு சார்! அந்தம்மாள், நாளைக்கு

வெள்ளிக்கிழமையாச்சே, காத்தாலே பூஜைக்குப் புஷ்பம் ஒண்ணும்னு வாங்கினாள், அதோடே சண்பகப் பூவும் இருந்ததாம். வாஸந்திக்காக மூந்து பார்த்து வாங்கினாள்; அப்படியே பிராணன் போயிருக்கு. அவள் மடியிலிருந்த மணிபர்ஸு, கழுத்திலிருந்த தாலி உருவு, கையிலிருந்த பித்தளே வளையல் எல்லாம் போயிட்டது. ஐயோ பாவம்! குழந்தைகளின் பரிதாபந்தான் சகிக்கல்லே. சவத்தைக் கொண்டுபோகும்போது மூர்த்திக்கு மயக்கமே போட்டுவிட்டது" என்றார்.

என்ன அநியாயம்! இந்த மாயக் கொள்ளேயின் விஷம் வேணியை அரைக்கணத்தில் விழுங்கிவிட்டதென்றால், ஊரே ஏன் கதறிக் கண்ணீர் விடாது? சவத்தைப் போலீஸார் முறைப்படிக்குக் கொண்டுபோய்ப் பரீக்ஷித்தார்கள். சவமாவது வந்து தம் கையினுல் அடக்கஞ் செய்யவேண்டி மூர்த்தியும், வாஸந்தியும் இன்ஸ்பெக்டர் ஏகாம்பரத்தினிடம் கெஞ்சிக் கதறினர்கள்.

இயற்கையிலேயே நல்ல உத்தம குணமும் தயாளத்துவமும் பொருந்திய ஏகாம்பரம் மன முருகியதால், மேலதிகாரிகளின் உத்தரவு பெற்றுச் சவத்தைச் சீக்கிரமாக அவர்களிடம் கொடுத்து விட்டார். ஒரு உத்தமி, கற்பிற்கரசி, மங்கையர் மாணிக்கம் ஒரு விடிைப் பொழுதில் உலகை விட்டு மறைந்துவிட்டாள். என்னே மனிதவாழ்வு!

---

## 38

பிண மேளத்தின் பெரும் முழக்கத்தையும் பீறிக்கொண்டு, "அம்மா! அம்மா! எங்களேத் தனியே விட்டு எப்படியம்மா போனே! இனுமே எங்களுக்கு யாரம்மா திக்கு!" என்ற இரு குரல்களின் கதறலும், "வேணீ! வேணீ! இது உனக்குத் தகுமா? இருண்ட உலகத்திலே என்னேத் தவிக்கவிட்டுப் போகலாமா?" என்ற ஒரு குரலின் ஓலமும் 'ஐயோ பாவம்! மாயக்கொள்ளேயாலே நிமிஷத்துலெ செத்துட்டாளாமே! ஐயோ! கொழந்தைகளின் பரிதாபம் சகிக்கல்லயே! அந்த மனுஷன் உசிரும் பூடும்போல இருக்கே. வீட்டிலே ஒரு கிழவி கோட்டானுட்டமா இருக்காளே! அவ சாகக் கூடாதா? என்ன அநியாயச் சாவு? மகாலக்ஷ்மி போல போருளே!" என்ற பொது ஜனங்களின் அபிமான

வார்த்தைகளின் பேரொலியும் ஒன்றுகூடி தெருவெங்கும் ஒரே சப்தமாக ஒலித்தது.

வேணிக்கு மஞ்சள், புஷ்பம், குங்குமம் முதலிய அலங்காரங்கள் செய்து, அவளை அடக்கம் செய்யத் தூக்கிச்செல்லும் பரிதாபக் காட்சி வீதியிலுள்ள அத்தனை ஜனங்களின் மனத்தையும் உருக்கிக் கண்ணீர் பெருக்கச் செய்துவிட்டது. ஆனால், வேணியின் அந்தரங்க சிநேகிதையும் பரிசுத்தாத்மாவுமான மைதிலியை, அன்று வாஸந்திக்குப் பீச்சில் மணிபர்ஸு கொடுத்த நாள்முதல் கிழவர் தனிச் சிறையில் போட்டுவிட்டதுபோல் தனியறையில் போட்டுப் பூட்டிவிட்டதால், இக்கோர சம்பவத்தை—அந்த உத்தமி எப்படி அறியக்கூடும்? அறிந்தால் அவளது சரீரமும் ஆன்மாவும் சிறையிலடைபட்டு இருக்குமா?

கூடத்து உள்ளே அடைபட்டுக் கிடக்கும் மைதிலியின் காதில் ஏதோ சவத்தின் கொட்டு முழக்கு முதலில் கேட்டது. "எந்த புண்ணியாத்மாக்களோ இந்த பாப உலகத்தை விட்டுச் செல்கிறார்கள்! ஆணோ, பெண்ணோ! கிழமோ கட்டோ! யார் கண்டது? உம். அவர்கள் கஷ்டம் நீங்கி நிம்மதி உலகம் செல்லுகிறார்கள். அம்மாதிரி இப்பாவி செல்லும் காலம்வருமா? ஏது வரப்போறதே இல்லை" என்றெல்லாம் தனக்குள் எண்ணிப் படுத்திருக்கையில், "அம்மா! அம்மா!" என்று கதறும் குரல் கேட்டது.

அந்தச் சமயம் வீதிப் பக்கத்து ஜன்னல் பக்கமாக, "ஒணும்! ஒணும்! நன்னா ஒணும்! என்னை மானபங்கம் பண்ணின பாவம் வீணாகப் போகுமா! அதனால்தான் உன் பசங்களையும் புருஷனையும் விட்டுட்டு உலகத்தையே விட்டுப் போறே! வேணீ! போ! போ! நாலுபேர் தோள்மேலே சவாரி போ! கண்ணை மூடிண்டு போ!" என்று ஆத்திரத்துடன் கிழவர் சொல்லும் குரல் மைதிலியின் காதில் நெருப்புபோல் விழுந்தது. அதே சமயம், "ஹா! வேணீ! வேணீ!" என்ற குரலும், "அம்மா! அம்மா!" வென்ற கதறலும் மீண்டும் கேட்டது.

'ஐயோ! வேணியா செத்துப் போய் விட்டாள். ஐயையோ! இதென்ன அநியாயம்! கருப்பா! கருப்பா! அடே கருப்பா என்று ஒரே கர்ஜனை செய்தாள். கருப்பன் கண்ணீர் பெருக ஓடிவந்து, "அம்மா! அந்த வேணி

யம்மா செத்துபூட்டாங்களாம்மா! பொணம் எடுத்துகினு போராங்கம்மா. கொயங்தெங்க கண்ணுரவியும் அந்த ஐயா வோடே வவுத்தெரிச்சலும் பாக்க சகிக்கலேம்மா! என்று புலம்பியபடியே சொன்னான்.

மைதிலிக்கு ஏற்கெனவே அடைபட்டுக் கிடப்பதால் பயித்தியம் பிடித்ததுபோல் இருந்த நிலைமை பின்னும் அதி கரித்து, விசனமும் இந்த ஷாக்கும் சேர்ந்ததால், வெறி பிடித்தவள்போல், "ஐயோ! வேணியாடா போயிட்டா கருப்பா! கதவு பூட்டெ ஒடெ! ஒடெ! முன்னெ ஒடச்சு எறி. உம், யோசனே என்ன! பூட்டெ ஒடக்கரயா! நானும் வேணி பின்னாலேயே போரதுக்கு இதோ பொடவெயாலே கழுத்திலே சுருக்கு மாட்டிண்டு சாகட்டுமா! கிழவரெ எதிர் பார்க்காதே!" என்று பெருத்தக் கூச்சல் போட்டுக் கத்து கிருள். கண்ணீர் ஆருய் ஓடுகிறது. தேகம் முற்றும் எரி வதுபோல் தத்தளிக்கிறது. புழுவைப்போல் துடித்தவாறு கதவைத் தடதடவென்று தட்டிப் பிளந்துவிட்டாள்.

கருப்பன் கிழவருக்காக முதலில் சற்று நேரம் பயந் தான். எனினும், மைதிலி தற்கொலை செய்துக் கொள்வ தாகக் கூறிய உடனே ஒரு இரும்பு சுத்தியால் பூட்டின்மீது ஒரு அடி வைத்தான். அதே சமயம் கிழவரின் கைத்தடி யால் கருப்பனின் மண்டையில் ஓங்கி பலமான அடி யொன்று விழுந்ததும், "ஹா! அம்மா!" என்று கூவிக் கொண்டே தடாரென்று கருப்பன் கீழே விழுந்தான்.

---

## 39

மீனாட்சி பள்ளிக்கூடத்திலிருந்து வரும்போது வீதியில் பிணம் செல்வதையும் வாஸந்தியும், மூர்த்தியும் கதறுவதை யும் பார்த்ததும், சிறுமியானாலும் அவள் மனசு தாங்காமல் கண்ணீர் முட்டுகிறது. தன் தாயார் இறந்துவிட்ட கதை கள் முற்றும் நினைவிற்கு வந்துவிட்டன. தன்னைப்போல் வாஸந்தியும் தாயற்ற பரதேசியாகிவிட்டாளே என்ற விச னமும் அனுதாபமும் மீனாவைக் கப்பிக் கொண்டன. இச் செய்தியை உடனே தன் சித்திக்குச் சொல்லும் பொருட்டு, ஓட்ட ஓட்டமாக ஓடி வரும்போதே, "சித்தீ! சித்தீ! வேணி மாமி செத்துப்பூட்டா! சித்தீ! பொணம் தூக்கிண்டு போரா!

வாஸந்தி ரொம்ப அழுரா சித்தி! ஐயோ பாவம்னு இருக்கு சித்தி!" என்று கூவிக்கொண்டே மைதிலியைப் பூட்டி இருக்கும் அறைப்பக்கம் ஓடிவந்தாள்.

அப்போதுதான் கிழவர் கருப்பன் மண்டையில் அடித்ததும், அவன் கீழே விழுந்ததும், உள்ளிருந்த மைதிலி கத்துவதும் மீனு நேரில் பார்த்து, நடு நடுங்கி சில விநாடி நேரம் அப்படியே ஸ்தம்பித்து விட்டாள். அங்கு நடக்கும் சம்பவத்தின் காரணத்தையும் ஒரு நொடிப் பொழுதில் அவள் யூகித்தறிந்து கொண்டாள். மைதிலி, 'ஐயோ! கதவைத் திற; திற' என்று கத்திக்கொண்டே இருப்பதையும் மீனு உணர்ந்தாள். பிறகு தன்னைச் சற்று ஒருவாறு சமாளித்துக்கொண்டு, தனக்குள் ஒரு யோசனை செய்து கொண்டாள்.

மெல்ல தகப்பனுரிருக்கும் இடத்திற்கு வந்து கண்ணீர் பெருகியவாறு, 'அப்பா! வேணி மாமி செத்துப்பூட்டாப்பா! வாஸந்தியும் என்னெப்போலெ தாயில்லாத பரதேசிப் பொண்ணுயிட்டாப்பா! நீ நெரய பணக்காரனு இருக்கரதாலே எனக்காவது ஒரு குறைவும் இல்லெ. வாஸந்தி ஏழெயாச்சேப்பா! அவா அம்மாவும் செத்துப்போயிட்டாளே! அவளுக்கு யார் சாதம் போடுவாப்பா?" என்று பெரிய குரல் பாய்ச்சி அழுதபடியே கிழவரைக் கட்டிக்கொண்டு, அவர் இடுப்பில் சொருகி இருந்த சாவிக் கொத்தை மெல்ல கழற்றித் தன் ஜோபியில் போட்டுக் கொண்டு கோ வென்று கதறினுள்.

கிழவருக்கிருந்த ஆத்திரத்தில் அவருக்கு ஒன்றுமே தோன்றவில்லே. "படுநீலி முண்டே! கருப்பனைக் கூட்டு கதவெ ஒடைக்கச் சொல்ல ஒனக்கு அத்தனெ தைரியமாடீ வந்துடுத்து?" என்று மைதிலியை வைவதிலிருந்ததால் மீனுவின் செய்கையை அவர் கவனிக்கவில்லே. மீனுவை இழுத்துத் தூர தள்ளிவிட்டு, "சீச்சீ! மூதேவி! யார் செத்தா யாருக்கென்னடி! தரித்திரமே! பெலாக்கணம் பாடி சித்தியோடெ நீயும் அழுடீ! பீடையே! எல்லாம் அஸமஞ்சமா வந்திருக்கு" என்று சீறி சிள்ளென்று விழுந்தார்.

மீனு கண்ணைத் துடைத்தபடியே சுற்றுமுற்றும் பார்த்துப் பின்னர் மெத்தையைப் பார்த்தாள். "அப்பா! அப்பா! அதோ மெத்தையிலே வேணு மாமா வந்திருக்

காப்பா! எதையாவது எடுத்துண்டு போயிடப் போரா ளெப்பா?" என்று தந்திரமாய்க் கூறியதுதான் தாமதம். "என்ன! என்ன! வேணு வந்திருக்கானு? கட்டெலெ போர வனெ! வா! வா! வாடா! இன்னிக்கு ஒங் காதலி ஒங்கண் ணுக்கு ஆப்படமாட்டா! ஒன்னெ இன்னியோடே தொலெச்சு தலெ முழுகிப்புட்றேன் வா!" என்று கைத்தடி யுடன் தடதடவென்று மெத்தையை நோக்கி ஓடினர்.

மீனு வெகு சுறுசுறுப்பாக அந்தக் கதவின் பூட்டைத் திறந்துவிட்டதும், மைதிலி தலைவிரி கோலமாக, "ஹா! வேணீ! வேணீ!" என்று கதறியபடியே வீதிப் பக்கம் ஓடி வந்தாள். அவள் வருவதற்கும் சவம் இவர்கள் வீட்டுப்பக் கம் வருவதற்கும் சரியாக இருந்தது. தூக்கிச் செல்லும் பிணத்தருகில் காளிகாதேவியின் ஆவேசம், உடன்பிறந்த சகோதரியின் ஒப்பற்ற வாஞ்சையும் ஒன்றுகூடி ஓடிவரும் மைதிலியைக் கண்டு எல்லோரும் வியப்புற்று அசைவற் றூர்கள்.

ஓடி வந்த மைதிலி, "ஐயோ! நில்லுங்களேன்! நில்லுங் களேன்! அந்தப் புண்ணியவதியின் அழகு முகத்தை— ஆசை முகத்தைக்—காட்டுங்களேன்! வேணி! வேணி!" என்று பதறித் துடிக்கும் துக்கத்துடன் பாடையைப் பிடித் திழுத்துக் கொண்டு கூடவே ஓடினள்.

பிணம் தூக்கிகளுக்கும் மனது கரைந்து விட்டதால், சவத்தைத் தாழ்த்திக் கையில் பிடித்தபடியே காட்டினர்கள் மைதிலி வேணியின் முகத்தோடு முகம் பதித்து, "வேணி! புண்ணியவதி! ஐயோ! உனக்கா சாவு வரணும்? மகா பாவி உலகத்திலேயே உதவாக் கட்டையான எனக்கு வரக் கூடாதா! ஐயோ! வேணி!" என்று கதறும் சமயம் வாஸந்தி தள்ளாடித் தடுமாறிக் கதறியபடியே ஓடி வந்து, "மாமீ! எங்கம்மா செத்துப்போய்ட்டாளே மாமீ! இனுமே நாங்க என்ன செய்வோம் மாமி! ஐயோ! மாமீ! எங்களெ உட்டுட் டுப் போய்ட்டாளே மாமீ!" என்று கூவியவாறு மைதிலி யைச் சேர்த்துக் கட்டிக் கொண்டாள். இக்காட்சி அங் குள்ள அத்தனை பெயர்களின் மனத்தையும் உருக்கியது. யாவரும் கண்ணீர் பெருக நின்றூர்கள்.

மைதிலி, "கண்ணூ! வாஸந்தி! என் செல்வமே!" என்று சேர்த்துக் கட்டிக் கொண்டு, தேகம் குலுங்கக் குலுங்கப் புலம்புகிருள். மெத்தைக்கு ஆத்திரத்துடன் சென்ற கிழ

வர் அங்கு வேணுசாமியை எங்கு தேடியும் இல்லாததால், ஏமாற்றத்துடன் திகைக்கையில், மைதிலி வீதியில் கதறும் குரல் கேட்டுக் குடுகுடுவென்று பால்கனிக்கு ஓடி வந்தார். வீதியிலுள்ள காட்சியைக் கண்டதும் தூக்கி வாரிப்போட்டது. பூட்டியடைத்து வைத்திருந்த பறவை எப்படி கூட்டை விட்டுப் பறந்துவிட்டது? '‚இதென்ன மோசம்! இதென்ன அநியாயம்!" என்று பின்னும் ஆயிரம் மடங்கு அதிகரித்த ஆத்திரத்துடன் செய்வதறியாது நின்றார்.

அதே சமயம் இத்தனை அமர்க்களத்திலும் வழக்கம் போன்று வாழ்க்கையின் நாதமான வானக்குயிலில் இனிய கீதம் கணீர் என்று சப்தித்தது.

(அதே மெட்டு--சரணம்)

இன்றிருப்பது மெய் ! நாளை இருப்பது பொய்
என்றறிந்துன் கடமை ஆற்றி இறைவனிடம்
சென்றிடுவாய் மனமே. (தூய்மை)

இந்தத் தேவகானத்தின் அதியற்புத அபார வசீகர சக்தியால் கவரப்பட்ட மைதிலி, தடைகட்டிய நாகம்போல் துவண்டு பிணத்தின்மீது விழுந்துவிட்டாள்.

---

## 40

சவச் சடங்குகளும், ஈமச் சடங்குகளும் முடிந்தன. மூர்த்தி ஏற்கெனவே அரைப் பயித்தியமாக இருந்தவன் முக்கால் பைத்தியம்போல் ஆய்விட்டான். ஊண் உறக்கம் துறந்து தேகம் மெலிந்து, "வேணி! வேணி!" என்று புலம்பித் தவிக்கிறான். மைதிலி அன்று சவ அடக்கம் ஆன உடனே வாஸந்தியையும், ராஜுவையும் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றுவிட்டாள். வாஸந்திக்கும், ராஜுவுக்கும் பலவிதத்திலும் தேறுதல் சொல்லி, அவர்களைப் பராக்குக் காட்டி சமாதானம் செய்வதையே மைதிலி முக்கியமாகக் கொண்டாள்.

கிழவருக்கு இந்தச் செய்கை எரியும் உடம்பில் எண்ணெயும் வார்த்ததுபோல் தோன்றியது. ஆத்திரம் பின்னும் மூண்டது. சதா மைதிலியைத் திட்டியும் சில சமயம் அடித்தும், இழிவாகப் பேசியும், இம்சை செய்து வருவதை வாஸந்தி உணராமலில்லை. தங்கள் பொருட்டு மைதிலிக்கு

ஏற்படும் துன்பங்களை அவள் சின்ன பெண்ணாயினும் நன்ருக அறிந்து இதற்கென்ன வழி செய்வதென்று யோசிக்க ஆரம்பித்துவிட்டாள்.

மைதிலி, குழந்தைகளுக்காக காப்பி ஆற்றிக் கொண்டிருந்தாள். பக்கத்தில் வாஸந்தி, ராஜு, மீனு மூவரும் உட்கார்ந்தார்கள். பொங்கும் ஆத்திரத்துடன் அங்கு வந்த கிழவர் பதட்டத்துடன், சற்றும் யோசிக்காமல், "ஏண்டீ! இந்த மாதிரி சோம்பேறிக் கூட்டத்தைக் கூட்டி வைத்துக் கொண்டு, ஒன் குடியைத் தண்ட குடியாக்கவாடி இம்மாதிரி செய்றே! பவிஷு கெட்ட கழுதைகளுக்குக் காப்பியும் டிப்பனும் வேறெயா?" என்று கூறிக்கொண்டே ஆத்திக் கொண்டிருந்த காப்பியை வெடுக்கெனப் பிடுங்கிச் சற்றும் அஞ்சாமல் மைதிலியின் தலைமீது கொட்டிவிட்டார். இந்த விபரீதச் செய்கையைக் கண்டு குழந்தைகள் மிரண்டுபோய் "ஹா! மாமீ! மாமீ!" என்று வாய்விட்டுக் கூறியபடியே எழுந்தார்கள். கிழவர் தங்களையும் என்ன செய்து விடுவாரோ வென்ற பயத்தால் நடுநடுங்கினார்கள்.

அதுவரையில் தனது பொறுமையை இழக்காதிருந்த மைதிலிக்கு ஆவேசம் காளிகாதேவியைப்போல் வந்து விட்டது. காப்பி வழியும் தலையுடனும், ஆவேச முகத்துடனும் தலைப்பை இழுத்துக் கட்டிக்கொண்டு, "ஆஹ்ஹா! இவ்வளவு தூரமா மிதமிஞ்சிவிட்டது. நான் எனக்காகவும் உங்களுக்காகவும் பயப்படவில்லை. என்னைப் படைத்த, பெற்ற தாய்நாட்டின் பெருமைக்காக, நான் இதுவரையிலே பொறுத்திருந்து நீங்கள் செய்த அநியாயத்துக்கெல்லாம் ஆளாகி இருந்தேன்.

பாரத நாட்டு நாரீமணிகளின் வழியைப் பின்பற்றி நடக்கணும்; அவர்கள் காட்டிய வழிக்குப் பங்கம் செய்யக் கூடாது. ஹிந்து தர்மத்தின் மகிமையைக் கெடுக்கக் கூடாது என்றெல்லாம் நான் எண்ணி என்னைப் படுத்தும் சித்திரவதைகளை எல்லாம் சகித்தேன். அப்படி நான் இனுமே பொறுக்கமாட்டேன்.

அக்கிரமம் மிஞ்சிப்போனு அதையும் தடுக்கவேண்டியது என் கடமை. என் வாழ்வைப் பாழ்படுத்தி கொலை செய்ததுமில்லாமல், இன்னமும் விபரீதம் விளைவிக்கவா எண்ணி இருக்கிறீர்கள்? மகா உத்தமியான வேணியின்

குடும்பம் யாரால் சிதறி அழிந்தது? அந்த உத்தமியின் உயிருக்கு உயிரான புருஷனுக்கு யாரால் அங்கபங்கம் உண்டாச்சு? இந்த ரகஸ்யத்தை மூடிவைக்கணுமா, ஓடச்சி வெளியே இழுக்கட்டுமா?

பொறுக்கப் பொறுக்க போராட்டமே அதிகமாறது. இந்த வீட்டின் சகல சொத்தும் எங்க அப்பன் வீட்டுது என்றது ஞாபகமிருக்கட்டும். நான் இன்னமும் மைனர் நீங்காதவள். என் சொத்தை அபகரிக்க உங்களுக்கு என்னிக்கும் சுதந்திரங் கிடையாது. நான் முன்னொரு காலத்தில் எழுதிக்கொடுத்த கடிதாசி மைனரானதால், சட்டப்படி செல்லாதுன்றது ஞாபக மிருக்கட்டும்.

அதிகமா வாலாட்டினல் இனிமே நான் பயப்படப் போறதில்லே மன்மத பாண சஞ்சீவிக்கும் மற்ற மருந்துக்குமே கடன் பட்டிருக்கும் ரகஸியமும்....ஹா!....இன்னொரு கொடிய ரகஸியமும் கூட எனக்குத் தெரியும். அதிகமாகப் பேசினு எல்லாம் அம்பலமாயிடும்; ஜாக்கிரதை" என்று துர்க்கா தேவிபோல் கூறியவாறு குழந்தைகளைச் சேர்த்து அணைத்துக் கொண்டாள்.

இம்மாதிரி தைரியத்துடன் மைதிலி பேசுவாள் என்று கிழவர் கனவிலும் எதிர்பார்க்கவில்லை யாதலால், சிடுசிடுத்து விட்டது. முகத்தில் பிணக்களை சொட்டுகிறது. ஆத்திரம் ஒருபுறம், அவமானம் ஒருபுறம் மைதிலியை ஒரே வெட்டு இரண்டே துண்டு செய்து விடலாமாவென்ற, எண்ணமும் உண்டாகிவிட்டது. பேந்தப் பேந்த விழித்தவாறு நின்றூர்.

---

## 41

**மை**திலியின் வீட்டில் ஒரு தனி இடத்தில் வாஸந்தி விக்கி விக்கி அழுது கொண்டிருந்தாள். ராஜு அவளைக் கட்டிக்கொண்டு, 'ஏங்கா அழறே! ஐயோ இதென்ன தழும்பு. தாதா அடிச்சுட்டாளா?" என்று கண்ணில் நீர் முட்டக் கேட்டான். வாஸந்தி அழுகையும் சிரிப்பும் கலந்த முகத்துடன், "இல்லே" என்று கூறினுள்; மேலே கூற முடியாது புலம்புகிறுள்.

ராஜு:—நீபோய் சொல்றே! இதோ பாரேன் தழும்பு. ஐயோ! அக்கா! நாம்ப ஆத்துக்கு அப்பாகிட்டெ பூட

லாம் வாடீ! இங்கே இந்தத் தாதாகிட்டே அடிபட வேண்டாண்டீ! என்னையும் தாதா அடிச்சிபுடுவார். வாக்கா! ஓடிப் பூடலாம்—என்று வாஸந்தியின் கையைப் பிடித்து இழுத்தான்.

வாஸந்திக்கும் அது சரியாகத் தோன்றியதாகையால், மெல்ல வந்து மைதிலியின் அறையில் எட்டிப்பார்த்தாள். மைதிலி படுத்துக் கண்ணை மூடிக்கொண்டிருந்தாள். அவள் தூங்குகிற சமயந்தான் சரி என்று எண்ணியவளாய் மைதிலியைச் சற்று நின்று பார்த்துவிட்டுக் கண்ணீர் வழிந்த படியே ராஜுவை இழுத்துக்கொண்டு ஒரே ஓட்டமாக வெளியே ஓடிவிட்டாள்.

வீதியில் இவர்கள் ஓடுவதை மெத்தையிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த கிழவர் தலையையும் தொந்தியையும் தடவிய வாறு, 'சனிகள் தொலைந்தன. இனி திரும்பி வரட்டும் சொல்றேன்'' என்று கூறியபடியே, "போங்கோ! திரும்பி வந்தா ஒதை. பத்ரம்'' என்றார். வாஸந்தி திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே செல்கையில் வலித்து அழகு காட்டி ஏளனம் செய்து கொண்டே போய் விட்டாள்.

---

## 42

மூர்த்தி துரும்பென மெலிந்து பித்தன் போல் வேணியின் படத்தினருகில் உட்கார்ந்துகொண்டு, கண்ணீர் விட்டுக் கதறிக்கொண்டே, "வேணீ! என்னை இப்படித் தனியே விட்டுப் போவேன்னு நான் கெனவில் கூட நினைக்கல்லெயே! என் கண்ணே! உத்தமப் பெண்ணே! எனக்கு வழி தெருயலையே! நான் இப்படிக் கஷ்டப்பட நீ செய்யலாமா! நீ இதைப் பார்த்துச் சகிக்கமுடியுமா! ஐயோ! நானொரு இடம்; நீயொருஇடம்! குழந்தைகள் ஒரு இடம்; நம் குடும்பம் இப்படியா சிதறிப்போகும்? என்னால் பொறுக்க முடியவில்லை! ஒன்னுக்கும் உதவாத நொண்டி. நான் இனிமே என்ன உபயோகம்? நீ போன எடத்துக்கு என்னையும் அழைச்சிண்டு போகக் கூடாதா?

வேணி! அழைக்கமாட்டே, என் கனவில் கூட வரமாட்டே! உன் பொறுமை நிறைந்த முகத்தைக் காட்ட

மாட்டே? ஒரு வார்த்தை உன் வாய் திறந்து சொல்ல மாட்டே! என்று புழுவாய்த் துடிக்கும் சமயம் அவ்விடம் குழந்தைகள் இரண்டும் ஓடி வந்து, "அப்பா!" என்று கட்டிக்கொண்டு கோவெனக் கதறி யழுதார்கள். துக்கத்தோடு துக்கம் ஒரே கையால் குழந்தைகளை வாரியணைத்துக் கொண்டு, "ஏண்டாப்பா! என்ன சமாச்சாரம்? என் கண்ணு! ஏம்மா அழறே?" என்று கேட்டான்.

வாஸந்தி :—(அழுதபடியே) அப்பா! நம்ப அம்மா ஏன் செத்துப்போனு! அவ செத்துப் போகவே தானே நமக்கிந்த கஷ்டம். அந்த மாமி எங்கமேலே ஆசையா இருக்கான்னு அவளை தாதா எப்பப் பார்த்தாலும் அடிக்கிறு திட்ரு. என்னையும் இதோ பாருப்பா, தழும்பு விழும்படி அடிசுப் பூட்டா! எங்களாலே மாமிக்குக் கஷ்டம். அதாலெ சொல்லாமே வந்துட்டேம்பா— என்று தேம்பி அழுதாள்.

இதற்கு மூர்த்தி என்ன பதில் சொல்வான்! கலங்கிய அவனுடைய உள்ளத்தில் இன்னும் சகிக்க முடியாத துக்கம் பொங்கி விட்டது. வாய் திறந்து பதில் பேசவே முடியவில்லை. கண்ணீர் ஆருய்ப் பெருகுகிறது. வேணியின் படத்தில் வைத்த விழியை வாங்காமல், அப்படியே குழந்தைகளை அணைத்தவாறு தம்பித்து விட்டான்.

அச்சமயம் மைதிலி அங்கு வந்து கதவினருகிலேயே நின்று, இந்தக் கோரக் காட்சியைக் கண்டு சகிக்காமல், கண்ணீர் விட்டபடியே உள்ளே சென்றுள். அவளாலும் பேச முடியவில்லை. ராஜு ஓட்டமாக ஓடிவந்து மைதிலியின் காலைக் கட்டிக்கொண்டு, "மாமீ! இனுமே நாங்க ஒங்காத்துக்கு வரமாட்டோம். எங்க ஒடம்பெல்லாம் வீங்கிடும்படி தாதா பெரம்பாலெ அடிச்சுபுட்டா! இனுமே வரவே மாட்டோம். எவ்வளவு கூட்டாலும் உங்காத்துக்கு வரவே மாட்டோம் மாமீ!" என்றுன்,

வாஸந்தி:—(ஓடி வந்து மைதிலியைக் கட்டிக் கொண்டு) மாமீ! எங்களை மன்னிக்கணும். நீங்க தூங்கினங்கோ! சொல்லாமெ வந்துட்டோம். தாதாக்கு ரொம்ப கோவம் வரது மாமீ! நாங்க இங்கெயே இருக்கோம் எங்களாலே ஒங்களுக்கு வசவு வேண்டாம் மாமி!—என்றுள். மைதிலிக்கு பதில் சொல்லமுடியாது கண்ணீர் பெருகி, துக்கம் தொண்டையை அடைக்கிறது. சோகப் பதுமைபோல் நின்றுள்.

மூர்த்தி:—(கண்ணைத் துடைத்துக் கொண்டு) அம்மா! ஒங்க உபசாரத்துக்கும் அன்புக்கும் பதில் ஒங்களுக்கு உபத்திரவமுண்டாகாமலிருந்தா போரும். அம்மணி! ஒங்க தயவு குழந்தைங்க மேலே இருக்கிறதே போரும். வீணுக கஷ்டம் படவேண்டாம். மன்னிக்கணும்—என்று வணக்கமாகக் கூறினன்.

மைதிலி:—(கண்ணீர் பெருகியபடியே) ஐயா! நான் பண்ண கருமத்தை நான் அனுபவிக்கிறேன். அதுக்கு குழந்தைகளென்ன பண்ணும்? கண்ணு! வாஸந்தீ! வர மாட்டே? ராஜு! வரமாட்டே.

ராஜு:—ஊஹூம் வரவே மாட்டேன்.

வாஸந்தி:—மாமீ! மன்னிக்கணும் மாமி! எங்கப்பா தனியா இருந்தா ரொம்ப கஷ்டப்படுவா மாமீ! அவருக்கு நான் இருந்தால் ஒத்தாசையா இருக்கும் மாமீ! பாட்டியும் துடிக்கிரு பாருங்கோ! அவளுக்கும் நான் ஏதாவது செய்ய லாமோன்னே. அதுக்காக வல்லே மாமி!—என்ருள். அதற்குமேல் மைதிலி ஒன்றும் சொல்லமுடியாமல், 10 ரூபாயைக் கொடுத்துவிட்டு வீட்டிற்குப் போய்விட்டாள்.

மூர்த்தி வேணியின் படத்தை நோக்கி, "வேணீ! நீ நிம்மதியாய் போயிட்டே. நான் நொண்டியாய் அலையறேன். இருந்தாலும் ஒன்னெ முழுங்கி ஏப்பம் விட்ட அந்த மாயக் கொள்ளைக்காராளெ புடிக்க நான் சத்ய சங்கல்பம் பண்ணுதே இருக்கமாட்டேன். அந்தச் சதிகாரக் கூட்டத்தைக் கண்டு பிடிக்க இப்பவே ஒம்மேலெ ஆணையா நான் கங்கணம் கட்டிக்கறேன். எந்தப் பாடு பட்டாவது நான் பிடிச்சே தீருவேன்" என்று அப்படத்தின் முன்பு சபதம் செய்துகொண்டு எழுந்தான்.

---

## 43

வீட்டில் பச்சிளங் குழந்தையான வாஸந்தியே, சமையல் செய்வது; கிழவி, ராஜு இருவருக்கும் போடுவது; தந்தைக்கும் தானே சில சமயம் கலந்து வாயில் ஊட்டுவது; ஓர் பெரிய குடும்பத்தைத் தாங்கும் தலைவி போலாய்விட்

டாள். ஆனல், சாப்பாட்டுக்குத்தான் வழி இல்லை. கையே இல்லாத மூர்த்தி எப்படி தையல் வேலை செய்யமுடியும்? மைதிலியின் உதவியால் ஜீவனம் செய்வதைத் தவிர அவர்களுக்கு வேறு வழியே இல்லை.

அன்று சபதம் செய்தது முதல் மூர்த்தி 'பைத்தியக் காரனைப்போல் தெருத் தெருவாய் அலைவதும், இந்தக் கொள்ளைக்கூட்டத்தாரை எப்படி பிடிக்கலாம் என்ற எண்ணத்தில் மூழ்குவதுமாக இருந்தான். யார் யார்மீது தனக்குச் சந்தேகமோ அவர்களை எல்லாம் பின் தொடர்ந்து கவனிப்பதும், சதா இரவும் பகலும் வீதியிலேயே அலைவதும், வேணியின் சமாதியருகில் சென்று புலம்புவதுமாக விருப்பதைக் கண்ட சிலருக்கு இவன் அலைவதன் உள் மர்மம் தெரியாதாகையினல், பித்தம் பிடித்துவிட்டது என்று எண்ணினர்கள்.

பின்னும் சிலர் "இவன் சம்சாரம் இறந்த பிறகு இரவு முற்றும் ஊர் சுற்றுவதால் புத்தியே கெட்டுவிட்டது. தீய காரியத்தில் பிரவேசித்து ஊர் சுற்றுகிருன். குடிக்கவும் ஆரம்பித்துவிட்டான்" என்று தாராளமாக பேசவாரம்பித்தார்கள். அநியாயமாகப் பேசும் அந்த வசைகள் மூர்த்தியின் காதில் விழாமலில்லை. தன்னுடைய கஷ்ட காலத்தின் கொடிய ஆட்சியில் எதையும் கேட்கும் விதி என்று பொறுமையுடன் நினைத்தானேயன்றிச் சற்றும் அவற்றைச் சட்டை செய்யவே இல்லை.

மூர்த்தியின் கவலை நிமிடத்திற்கு நிமிடம் அதிகரிக்கும் வேகத்தில் அடிக்கடி அவனுக்குப் புத்தி மாருட்டமும் தலை சுற்றலும், மயக்கமும், நடக்கும்போதே ஒருவிதமான சோர்வும் தடார் தடார் என்று தடைகட்டிய நாகம்போல் நின்று விழிப்பதுமான ஓர் நிலைமையும் உண்டாகிவிட்டன. தனக்குச் சரியான புத்தி இருக்கிறதா, அன்றிக் கலங்கிவிட்டதா வென்ற சந்தேகம் அடிக்கடி அவன் மனதிலேயே தோன்றிக் குழம்பிப் போவான். இத்தகைய தடுமாற்றங்கள் உண்டாகும் போது அவனை யறியாத ஓர் வித பீதியும் திகிலும், சகிக்க முடியாத துக்கமும் பொங்கி வரும். தன் பாழாய்ப்போன விதியினல் ஒருகால் மூளையும் சிதறிவிட்டால் என்ன செய்வது? பிறகு குழந்தைகளின் கதியும் கிழவியின் விதியும் எப்படி முடியும் என்று நினைக்கும்

போது அவன் நிற்கவும் சாத்தியமற்றுத் துவண்டு கீழே விழுந்து விடுவான்.

இம்மாதிரி நிலைமையுடன் ஒரு தினம் பகல், பித்தன் போல் வெகுதூரம் நடந்து செல்கையில், மேற்குறித்த எண்ணங்கள் அவனை முற்றிலும் கப்பிக்கொண்டுவிட்டன. தன் மொண்டிக் கையைப் பார்க்கிறான். சகிக்க முடியாத வேதனையுடன் கண்களை மூடிக் கொண்டு, 'ஹா!' வென்று ஒரு பெருமூச்சுடன் தடுமாற்றமடைந்து, நடுவழியிலேயே விழுந்தான்.

அங்கு சிறிது தூரத்தில் இரண்டு மூன்று பேர்கள் பேசிக்கொண்டே ஏதோ பச்சிலைகளைப் பறித்துக் கொண்டே இருந்தார்கள். மூர்த்தி கீழே விழுந்தவன் சிறிது நேரங்கழித்துச் சற்றுத் தெளிவு பெற்றுத் தலையைத் தூக்கிப் பார்க்கும்போது, "இந்தப் பச்சிலை தாண்ணே! இதுதான் மூந்து பாத்தவுடனே ஆளெ மயக்கிப்புடும். கத்தெ கத்தெயா இதெத்தாண்ணே கொண்டு வந்து மருந்து செய்யணும்" என்று ஒரு குரல் கேட்டது.

மூர்த்தி இதைக் கேட்டதும் ஏதோ புதையல் கண்ட தரித்திரன்போலச் சந்தோஷத்தை யடைந்து எழுந்து உட்கார்ந்து நாற்புறமும் சுற்றிப் பார்த்தான். சிறிது தூரத்தில் இரண்டு முரட்டு ஆள்கள் ஏதோ பூண்டுகள், பச்சிலைகள் இவைகளைப் பறித்துக்கொண்டு செல்வதைக் கண்டான். மெல்ல எழுந்து அவர்கள் செல்லும் திசையாகவே சென்று பார்த்தான். அதற்குள் அவர்கள் வெகு தூரம் போய்விட்டார்கள். அவர்கள் பறித்தது எந்த பச்சிலையாக விருக்கும் என்று அவன் கீழேயுள்ளவற்றையெல்லாம் பார்த்தான். அங்ஙனம் பார்த்தும் ஒன்றும் தெரியவில்லை. ஏதாவதொரு இலையை முகந்து பார்க்கவும் பயப்பட்டவாறு சில இலைகளை மட்டும் பறித்துக்கொண்டு, "வேணீ! உன்னைக் கொன்ற விஷம் இதுவாயிருந்தால், நீ எங்கேயோ தெய்வமாயிருந்து இதைக் காட்டிக்குடுத்து பழிக்குப்பழி வாங்கி என் ஆத்திரத்தைத் தீர்த்துச் சாந்தியை உண்டாக்கு" என்று வெறிபிடித்தவன்போல் கூறிக்கொண்டே "ஆம்! இந்தப் பச்சிலைகளை நாம் முதலில் இன்ஸ்பெக்டருக்குக் காட்டலாம்' என்று எண்ணியவாறு நடந்தான்.

இன்ஸ்பெக்டர் ஏகாம்பரத்தின் வீட்டில் அவர், இந்த மாயக்கொள்ளையின் மர்மத்தைப் பற்றியே தீவிரமாக யோசித்துக் கொண்டிருந்தார். அச்சமயம் வேதாசலம் வெகு அவசரமாக இன்ஸ்பெக்டரின் வீட்டிற்கு ஓட்டமாக ஓடிவந்தார். இவர் வரும் அலங்கோலத்தைக்கண்ட இன்ஸ்பெக்டர் சற்று வியப்புடன் "என்ன சார் விசேஷம்?" என்றார்.

வேதா:—விசேஷமா! ரொம்ப ரொம்ப விசேஷம்! மாயக் கொள்ளைக்காரர்களில் சில பேர் பிடிப்பட்டுவிட்டார்கள். நான் என்னன்னு சொல்வேன் போங்கோ! என் கண்ணையே, என் மனசையே நான் நம்பல்லெ. அக்கிரமம்! அநியாயம் சார்!

"என்ன! என்ன சமாச்சாரம்? சீக்கிரம் சொல்லுங்கோ! எங்கே பிடிபட்டிருக்கா! யார் புடிச்சா! எழுந்திரும் ஓடனே போகலாம்" என்று கூறிக்கொண்டே ஏகாம்பரம் எழுந்திருக்க முயன்றார். வேதாசலம் அவரைத் தடுத்து உட்கார வைத்து, "சார்! அவசரப்படாதேங்கோ! இருங்கோ! நான் தக்க போலீஸாரிடம் புடிச்சி குடுத்துட்டு தான் வந்திருக்கேன். அந்த மாயக் கொள்ளையிலே அந்த நொண்டி மூர்த்தியும் சம்பந்தப்பட்டிருக்கான்னுக்கா அதை விட ஆச்சரியம் வேறே வேணுமா சார்!" என்றார்.

இதைக் கேட்டதும் ஏகாம்பரத்திற்குத் தூக்கிவாரிப் போட்டது. "என்ன! என்ன! மூர்த்தி சம்பந்தப்பட்டிருக்கானு! இதென்ன வேடிக்கையாயிருக்கு? அவன் மனைவியெ கொலை பண்ணிப்புட்ட கொள்ளைக்கூட்டத்துலேயா அவன் சேருவான்? பழிக்குப் பழி வாங்கப்போறேன் என்றுதானே அவன் சொல்லிண்டிருந்தான்.

கிழவர்:—சார்! இது யாரும் நம்பவே முடியாத காரியம் சார்! மொதல்லே ஆசாமி பழிக்குப்பழி வாங்கத்தான் நெனைச்சிண்டிருந்தான். அதனலே அவாளே கண்டுபிடிக்கத்தான் அலைஞ்சான். அதுலே ஒத்தனெ புடிச்சு போலீஸ்காரன் கிட்டே காட்டிப்புட்ரதாகப் பயமுறுத்தினனும். அப்பறம் விஷயம் என்னச்சு தெரியுமோன்னே? செத்தவள் எப்படியும் செத்துப்பூட்டா! அவ இனுமே திரும்பி வரப்போவதில்லை. தானே மொண்டி. சம்பாதிக்க

